Regd. No. 2975 ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 302

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. [illegible]

பேரருளாளர் திருக்கச்சிநம்பியார்
திருவடிகளே சரணம்.



[illegible]

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாதுமில் குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்ய அவர்கள் உரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1973ஆ நவம்பர்மீ வெளியிடப்பட்டது

# ஆப்தர்கள் ஐவர்க்கு ஷஷ்ட்யப்த பூர்த்தி மஹோத்ஸவம்

1. ஸ்ரீமதுபயவே. வித்வான் கே. தாதாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீவில்லிபுத்தூர். நேற்று புரட்டாசிமீ ரேவதி நக்ஷத்திரத்தில், ஸ்ரீவில்லிபுத்தூரில் இவரது திருமாளிகையில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் வெகு சிறப்பாக நடந்தேறியது. நாலாயிரதிவ்யப்ரபந்த ஸேவையும் வேதபாராயணமும் வித்வான்களின் உபந்யாஸங்களும் ஸன்னிதிச் சிறப்புகளும் மிகமிகப் போற்றத்தக்க வைகரியில் நடந்தன. இந்த ஸ்வாமியின் பாண்டித்யம் உலகமறிந்தது. பல வருஷங்கள் திருவல்லிக்கேணியில் தமிழ்ப் பண்டிதராக எழுந்தருளியிருந்தவர். ஸமீப காலத்தில் ஓய்வுபெற்றவர். வைகுண்டவாஸியான ஸ்ரீமதுபயவே. வித்வான் விஞ்சிமூர் ஆழ்வார் ஸ்வாமியின் திருத்தம்பியார். "வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாளவர்மண்ணூடே

2. ஸ்ரீமான் உ. வே. திருமலை விஞ்சிமூர் நரஸிம்ஹாசாரியர். ஸ்ரீமான் உ. வே. திருமலை விஞ்சிமூர் நரஸிம்ஹாசாரியருக்கு நேற்று அச்வனீ நக்ஷத்திரத்தில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் திருவல்லிக்கேணியில் வெகுசிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீகாஞ்சீபுரியில் தென்னாசார்ய தர்சன நிர்வாஹகராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத். விஞ்சிமூர். பாஷ்யகாராச்சாரியர் ஸ்வாமியின் அத்விதீய குமாரர் இவர். சென்னையில் ஸ்கூல் மாஸ்டராயிருந்து ஓய்வு பெற்றவர். ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி ஸன்னிதி அத்யாபகர். இவர்க்குப் பல்லாண்டு பாடுகிறோம்.

3. ஸ்ரீமதுபயவே. எஸ். தெய்வநாயகமய்யங்கார் ஸ்வாமி (வானமாமலை) ஸெகிந்தராபாத். இந்த ஸ்வாமிக்கு நேற்று புரட்டாசிமீ பரணீ நக்ஷத்திரத்தில் (14—10—73ல்) ஸெகிந்தராபாத் மஹாநகரில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் வெகு சிறப்பாக நடந்தேறியது. இந்த ஸ்வாமி நெடுநாள் வானமாமலையில் எழுந்தருளியிருந்து காவ்ய நாடக அலங்காரங்களை அதிகரித்து பகவத் விஷய ரஹஸ்யாதிகளையும் காலக்ஷேபம் செய்த உத்தமாதிகாரி. ஸெகிந்திராபாத் ஸ்ரீ லக்ஷ்மீநாராயணன் ஸன்னிதியில் அதிகாரியாயிருந்து நிர்வாஹம் செய்தருளிவருகிறார் இந்த ஸ்வாமி "கண்டார் வணங்கக் களியானைமீதே கடல் சூழுலகுக்கொரு காவலராய் விண்தோய் நெடுவெண் குடை நீழலின்கீழ் விரிநீருலகாண்டு" விளங்கவேண்டும்.

4. நாராயணய்யங்கார், ஈரோடு. ஈரோடு பெருமாள் கோயில் கோட்டையில் வாழும் ஸ்ரீமதுபயவே. ஸ்ரீநாராயணய்யங்கார் ஸ்வாமிகளுக்கு சென்ற புரட்டாசி மாதத்தில் சுபதின முகூர்த்தத்தில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் வெகு சிறப்பாக நடந்தேறியது. சிறந்த கல்விமாளரும் பரம ரஸிகருமான இப்பெரியார் நித்யஸ்ரீர் நித்யமங்களமாக நீடூழிவாழ வேணுமென்று ஆசாஸிக்கிறோம்.

5. ஸ்ரீமத் உபயவே. கே. ஆர். ராஜகோபாலய்யங்கார் ஸ்வாமி, சேரங்குளம். பட்டுராஜம் ஸ்வாமி என்று வழங்கப்படுகிற இந்த மஹாஸ்வாமிக்கு நேற்று பூர்வபல்குனி நக்ஷத்திரத்தில் (22—10—73) திங்கட்கிழமையன்று இவருடைய திருமாளிகையில் ஷஷ்ட்யப்த பூர்த்தி மஹோத்ஸவம் விசேஷ வைபவமாக நடந்தேறியது. ஸ்ரீ ராஜமன்னார் ஸன்னிதி ஸ்ரீ ராஜகோபாலன் ஸன்னிதிக்கு தர்மகர்த்தாவாக விளங்கும் இந்த மஹாஸ்வாமிக்கு எவ்விதமான சிறப்புகள் நடக்க ப்ராப்தமோ அவ்வளவும் விசேஷவைபவத்துடன் நடந்தேறியதாகக் கேட்டு மகிழ்கிறோம். இந்த ஸ்வாமி மேன்மேலும் சதாபிஷேகம் முதலிய மஹோத்ஸவங்களை ஸ்ரீராஜகோபாலன் திருவருளால் பெற்று மகிழ்வாராக. "பொலிக! பொலிக!! பொலிக!!!"

# ஸ்ரீ ராமாநுஜன் 302



மாதந்தோறும் வெளிவரும் ஸ்ரீவைஷ்ணவஸமயாசார
ஸம்ரக்ஷணப் பத்திரிகை
ஆசிரியர்:- ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி மஹாமஹிமோபாத்யாய
ஸ்ரீகாஞ்சீ ப்ரவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்

| ஸம்புடம் 26 | பிரமாதீச ஹூ ஐப்பசித் திருமூலம் | ஸஞ்சிகை 2 |
|---|---|---|


# ஐப்பசித்திங்களுக்கு ஐவரால் பெருமை

சித்திரை முதலிய ஒவ்வொரு மாதத்திலும் ஆழ்வாராசாரியர்களின் திருவவதார மஹோத்ஸவங்கள் ஆங்காங்கு ஸ்ரீ வைஷ்ணவர்களால் அநுபவிக்கப்பட்டே வருகின்றன. அத்தகைய மாதங்களில் ஐப்பசி மாதத்திற்கு நிகரான மாதம் வேறில்லை. கார்த்திகை மாதத்தில் ஆழ்வார்களில் திருமங்கையாழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் ஆசார்யர்களில் நம்பிள்ளையையும் அநுபவிக்க ப்ராப்தமாகும் மார்கழி மாதத்தில் தொண்டரடிப் பொடியாழ்வாரொருவரை யநுபவிக்க ப்ராப்தமாகும். தை மாதத்தில் ஆழ்வார்களில் திருமழிசையாழ்வாரையும் ஆசார்யர்களில் எம்பார் ஆழ்வான் ஆகிய இருவரையும் அநுபவிக்க ப்ராப்தமாகும். இப்படிப் பார்த்துக் கொண்டே போனால் ஒவ்வொரு மாதத்திலும் ஸ்வல்ப அநுபவமே. தேறும். ஐப்பசி மாதத்திலோ வென்னில் கொள்ளை கொள்ளையான அநுபவம் ஆழ்வார்களில் எப்புவியும் பேசுபுகழ்ப் பொய்கையார் பூதத்தார், பேயாழ்வார்களின் அநுபவம். ஆசார்யர்களில் அன்ன புகழ் முடும்பையண்ணல் உலகாசிரியனும் அந்தமில் சீர் மணவாளமுனிப்பரனுமாகிய தலை சிறந்த இருவருடைய அநுபவம் அப்ரமேயமானது. இவ்வநுபவம் நமக்கு அர்ச்சைகளில் ப்ராப்தமாகி வருவது பரம பாக்யம். இப்போது அவ்வநுபவத்தில் இருந்து வருகிறோம். ஸ்வாமி எம்பெருமானார் ஸ்ரீ வைகுண்டகத்யத்தின் முடிவில் "அம்ருத ஸாகராந்தர்நிமக்நஸர்வாவயவ: ஸுகமாஸீத" என்றருளிச் செய்த நிலைமையில் இருந்து வருகின்றோம். ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு அநுபவிக்கிற அநுபவம் உலகில் நம்மவர்களெல்லார்க்கும் ப்ராப்தமாக வேண்டுமென்று கருதி முதலாழ்வார்களுடையவும், பிள்ளைலோகசார்யருடையவும், மணவாள மாமுனிகளுடையவும் பெருமைக்கடலில் சில திவலைகளை இங்கு ஆஸ்வாதனம் செய்கிறோம்.

# 1. பொய்கையார்

முதல் திருவந்தாதியென வழங்கப்பெறும் நூறு பாசுர முள்ளதொரு திவ்வியப்பிரபந்தம் இவர் தம்முடைய முதன்மையான அருளிச் செயலாகும். இதில் ஒரு பாசுரத்தை ஸாரமாக வெடுத்து அநுபவிப்போம். நான்காவது பாசுரத்தில் *நெறிவாசல் தானேயாய் நின்றானை* என்பது முதலடி. இப்பாசுரத்தில் ஒரு புராதன கதையை யருளிச் செய்கிறார். அதை அடுத்தபடியாக எடுத்துக் கொள்வோம். 'தேவோ நாமஸஹஸ்ரவாந்' என்றபடி பேராயிரமுடைய பெருமானுக்கு ஆழ்வார் சாத்துகிற விலக்ஷணமான திருநாமம் நெறிவாசல் தானேயாய் நின்றான் என்பது. நெறி யென்று மார்க்கத்தைச் சொல்லிற்றாய் உபாயம் என்றபடி. ஸாதன மென்பதும் உபாய மென்பதும் பர்யாயம். வாசல் என்றது புகுமிட மென்றபடியாய் உபேயத்தைச் சொல்லிற்றாகும். உபேய மென்பதும் ப்ராப்ய மென்பதும் ஸாத்ய மென்பதும் பர்யாயம். உலகில் ஒவ்வொருவர் ஒவ்வொன்றை உபேயமாகக் கொள்வர் [பேறாகக் கொள்வர்]; அதைப் பெறுதற்கு உபாயம் வேண்டியேயிருக்கும். உபாயமில்லாமல் உபேயம் கிடைக்காது. ஆகவே உபாயம் வேறாய் உபேயம் வேறாயிருப்பது பொதுவான போக்கு. எம்பெருமான் விஷயத்தில் மட்டும் இது விலக்ஷணமாயிருக்கும். அவனைப் பெறுதற்கு அவனே உபாயம். "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் ந து குணௌ" என்ற பட்டருடைய ஸ்ரீ ஸூக்தி அற்புதமாய் அமைந்தது; எம்பெருமானுக்கு உபாயத்வமும் உபேயத்வமும் குணங்களல்ல; ஸ்வரூபம்; (அதாவது) அஸாதாரண லக்ஷணம் என்றபடி. எம்பெருமானுக்கு என்ன லக்ஷணம்? என்று ஒருவர் கேட்டால், தானே உபாயமாயும் தானே உபேயமாயுமிருக்கை லக்ஷணம் என்று சொல்லிவிடலாம். இப்படிப்பட்ட வஸ்து வேறொன்று இருப்பதாகக் காட்டமுடியாது. இவ்வதிசயத்தைப் பொய்கையாழ்வார் 'நெறிவாசல் தானேயாய் நின்றான்' என்று ஒரு திருநாமமாக்கிக் காட்டினார்.

இப்பாட்டில் கூறிய பழைய இதிஹாஸமாவது "ஆலமர நீழல் அறம் நால்வர்க்கு அன்றுரைத்த ஆலமமர் கண்டத்தரன்"—விஷகண்டனென்று பேர் பெற்ற பரமசிவன் ஆலமரத்தின் நிழலிலே யிருந்துகொண்டு அகஸ்த்யர் புலஸ்த்யர் தக்ஷர் மார்க்கண்டேயர் என்கிற நால்வர்க்கு தர்மோபதேசம் செய்தனனும். இக் கதையைத் திருமழிசைப் பிரானும் தம்முடைய திருவந்தாதியில் "ஆல நிழற் கீழ் அறநெறியை நால்வர்க்கு, மேலையுகத் துரைத்தான் மெய்த்தவத்தோன்" என்ற பாசுரத்தினால் அருளிச் செய்தார். அது நிற்க. இக் கதையை இங்குப் பொய்கையாழ்வார் ஸாதிப்பது வெகு விலக்ஷணம். முன்னம் தானறிந்தன்றோ பிறர்க்கு உபதேசிக்கவேணும். பகவத் விஷயம் இவனுடைய அறிவுக்கு எட்டுமதன்றே, என்பார் போன்று 'அரன் அறிவானும்' என்று ஏசும் முறையில் பேசுகிறார். அன்றியும், தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுதுமொத்த பகவத் விஷயத்தை அம்ருத கண்டன் அன்றோ பேசவேணும்; [ஆலமமர்கண்டத்தரன்] ஹாலாஹல மென்னும் விஷத்தைக் கழுத்திலே கொண்டுள்ள இவனோ பேசுவது? என்று இதுவும் ஒரு ஏச்சு.

## 2. பூதத்தார்

இவ்வாழ்வார் தமது திருவந்தாதியில் (16) *வனத்திடரை ஏரியாம் வண்ணமியற்றுமிது வல்லால், மாரி யார் பெய்கிற்பார் மற்று* என்று விலக்ஷண மானதொரு த்ருஷ்டாந்தம் காட்டியருளினர். மேடான நிலத்தை வெட்டிப் பள்ள மாக்கி விடலாமேயல்லது தண்ணீரையுண்டாக்க யாரால் முடியும்? என்பது இதன் கருத்து. ஒரு தெருவில் இரண்டு வீடுகள். ஒரு வீட்டு வாசலில் பள்ளமிருந்தது. அதில் மழைத் தண்ணீர் தேங்கி வீட்டுக்காரனுக்கு மிகவும் ஸௌகரியமளித்து வந்தது. மற்றொரு வீட்டு வாசலில் பள்ளமின்றிக்கே மேடு இருந்தபடியால் அங்குத் தண்ணீர் தேங்குவதற்கு அவகாசமில்லாமலிருந்தது. பள்ளம் வெட்டிவிட்டால் நாமும் பக்கத்து வீட்டுக்காரன் போல் ஸௌகரியமடையலாமென்றெண்ணி மேட்டை வெட்டிப் பள்ளமாக்கினான். ஆனால் மழைபெய்யாமையினால் தண்ணீர் வரவில்லை. இதனை நெஞ்சில் ஊன்றி நோக்குவோமாயின் இதிலிருந்து ஒரு சாஸ்த் ரார்த்தம் கிடைக்கும். (அதாவது)—பள்ளம் வெட்டுதல் மழை பெய்வதற்கு ஸாதனமன்று; 'நான் பள்ளம் வெட்டி விட்டேன், மழையே! நீ பெய்தாகவேணும் என்று மேகத்தை வடிம்பிட முடியாதன்றோ. நாம் பள்ளம் வெட்டுவது மழைக்கு ஸாதனமன்றாகில், வீணான இச்செயலை எதற்காகச் செய்வது? என்று நினைக்கலா காது; பள்ளம் வெட்டி வைத்தால் காலவிசேஷத்தில் தானாகப் பெய்கிற மழையை இது தாங்கிக் கொள்ள ஹேதுவாகும்

இது போல நாம் சேதனராகப் பிறந்துள்ள வாசிக்காக நம்முடைய நிலைமை யைச் சீர்படுத்திக் கொள்வோம். இது பகவத் க்ருபைக்கு ஸாதனமாகமாட்டாது. ஒருகால் பகவான் நம் மீது அருள் வெள்ளத்தைப் பெருக்கத் திருவுள்ளம் பற்ற நேர்ந்தால் அந்த விஷயீகாரம் நம்மிடத்தில் நன்கு தங்குவதற்குப் பாங்காகு மத்தனை—என்பதாம். திருந்தமுருத சேதனரை மேட்டு நிலத்தின் ஸ்தானத்திலே கொள்க. அத்வேஷாதிகளாலே தம் நெஞ்சைத் திருத்திக் கொள்வதை ஏரியாம் வண்ணமியற்றுவதாகக் கொள்க. நிர்ஹேதுக பகவத் ப்ராப்தி கைபுகுதலை மாரி பொய்கையாகக் கொள்க. ... ... ... ... *

## 3. பேயார்

இவ்வாழ்வாருடைய திருவந்தாதியில் (17.) *சென்ற நாள் செல்லாத செங் கண்மாலெங்கண்மால் என்ற நாள் எந்நாளும் நாளாகும்* என்றுள்ள பாசுரம் நிச் சலும் சிந்திக்கத்தக்கது. இப் பாசுரத்தின் பரமதாற்பரியமென்னவென்றால் ஒருவனுக்கு நிகழ்காலமொன்று நல்லதாகச் செல்லுமானால் அவன் இறந்த காலத் தைப்பற்றியும் எதிர் காலத்தைப்பற்றியும் கவலை கொள்ள வேண்டா என்பதே. சென்ற நாள்—செல்லாத நாள்—செங்கண்மாலெங்கள்மால் என்ற (நிகழும்) நாள் —ஆக முக்கால நாட்களும் நல்ல நாட்களே என்பதாகப்பாசுரத்தின் பொருள். செங் கண்மால் எங்கள்மால் என்ற நாளாவது—எம்பெருமானை யநுபவிக்கும் நாள். அந்த நாளொன்று வாய்க்குமானால் சென்ற நாள் நன்னாளேயாம்—பகவதநுபவமில்லாமல் பழுதே கழிந்த நாளும் நன்னாளேயாமென்கை. எப்படி யென்னில்; அந்த நாள் கழிந்து போனதனாலேயே. இன்று வயிறுரவுண்டவன் கீழே பட்டினிகிடந்து பசியால் வருந்

தின நாளை நினைத்து வருந்த வேண்டாவே. அதே போல மேல் வரப்போகும் நாளை நினைத்தும் வருந்த வேண்டா. இன்று செல்வம் படைத்தவன் நாளைக்கு நாம் செல்வமிழந்து தரித்ரனாய் விடுவோமோ வென்று நினைத்திடாமல் எப்போதும் இப்படியே யிருப்போமென்று நினைத்து மகிழ்ந்திருப்பதுபோல, இன்று பகவதநுபவம் செய்பவன் இப்படியே நமக்கு நித்யமாய்ச் செல்லுமென்று மகிழ்ந்திருக்கவேண்டும். ஆக, ஒருவனுக்கு நிகழ்கால மொன்றுமட்டும் நன்றாயிருந்துவிட்டால் அவனுக்கு இறந்த காலமும் எதிர் காலமும் நன்றேயென்றதாயிற்று.

## 4. பிள்ளைலோகாசார்யர்

பிள்ளைலோகாசார்யருடைய தனியனில் "ஸம்ஸார போகி ஸந்தஷ்ட ஜீவ ஜீவாதவே" என்றது மிகப் பொருத்தமான விசேஷணம். பாம்பு கடித்துத் துடிக்குமவனை விஷவைத்யன் பிழைப்பூட்டுமா போலே ஸம்ஸார ஸர்ப்பதஷ்டர்களைத் தமது திவ்ய ஸ்ரீஸூக்திகளினால் உஜ்ஜீவிப்பித்தருளினவர் பிள்ளைலோகாசார்யர். இவருடைய திருவாக்குக்களான அஷ்டாதசரஹஸ்யங்களில் ஸ்ரீவசனபூஷணம் தத்வத்ரயம் முமுக்ஷுப்படி என்ற மூன்று ரஹஸ்யங்கள் ஸாரதமங்களாகக் கொள்ளப்பட்டு விளங்குகின்றன, இம் மூன்றையுமே மணவாள மாமுனிகள் வியாக்கியானித்தருளி விசதவாக்சிகாமணி யென்று விருது பெற்றனர்.

இவற்றில் தத்வத்ரயத்தில் ஈச்வர ப்ரகரணத்திலுள்ள (151) ஒரு சூர்ணையை மட்டும் ஈண்டெடுத்துக் காட்டி அதன் அரும்பெரும் பொருளை யநுபவிப்போம்.

151. இப்படி, ஈச்வரன் கல்யாண குணங்களோடே கூடியிருக்கையாலே, பிறர், நோவுகண்டால், ஐயோ! என்றிரங்கி, அவர்களுக் கெப்போதுமொக்க நன்மையைச் சிந்தித்து, தனக்கேயாயிருத்தல், தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருத்தல் செய்யாதே, நிலாத்தென்றல் சந்தநம் தண்ணீர்போலே பிறர்க்கேயாய் தன்னையாச்ரயித்தவர்கள் பக்கல் ஜந்மஜ்ஞாநவ்ருத்தங்களாலுண்டான நிகர்ஷம் பாராதே, தாங்களும் பிறரும் தஞ்சமல்லாத போது தான் தஞ்சமாய், ஸாந்தீபிநி புத்ரனையும், வைதிகன் புத்ரர்களையும் மீட்டுக்கொண்டு வந்தாப்போலே அரியன செய்தும். அவர்கள் அபேக்ஷிதங்களைத் தலைக்கட்டியும், அவர்களுக்கு த்ருவபதம் போலே பண்டில்லாதவற்றையு முண்டாக்கியும், தந்தாம் ஸ்வம் தாந்தாம் விநியோகம் கொண்டாப்போலேயிருக்க தன்னையும் தன்னுடைமையையும் வழங்கி, அவர்கள் கார்யம் தலைக்கட்டினால் தான் க்ருதக்ருத்யனாய், தான் செய்த நன்மைகளொன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருத லவத்தையே நினைத்து, அநாதிகாலம் வாஸிதங்களான ரஸங்களை மறக்கும்படி யெல்லா தசையிலும் இனியனாய், பார்யாபுத்ரர்கள் குற்றங்களைக் காணக் கண்ணிட்டிருக்கும் புருஷனைப்போலே அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தால் நினையாதே, குற்றங்களைப் பெரியபிராட்டியார் காட்டினாலும் அவளோடே மறுதலைத்துத் திண்ணியனாய் நின்று ரக்ஷித்து, காமிநியுடைய அழுக்கு உகக்கும் காமுகனைப்போலே அவர்கள் தோஷங்களை போக்யமாகக் கொண்டு அவர்கள் பக்கல் கரணத்ரயத்தாலும் செவ்வியனாய், பிரிந்தால் அவர்கள் வ்யஸநம் குளப்படி யென்னும்படி தானீடுபட்டு, அவர்களுக்குப் பாங்காகத் தன்னைத் தாழவிட்டு அவர்களுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி யெளியனாய், அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலு மேற்குமாபோலே பெரியபிராட்டியாரையும் ஸூரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக்கொண்டுபோரும்.

(விவரணம்.) ஸர்வேச்வரன் கீழே விவரித்த திருக்குணங்களோடு கூடினவனாகையாலே அடியார் பக்கலில் பரிமாறிப்போரும்படிகளைப் பரக்கப் பேசுகிறது இந்த சூர்ணிகை. பிறர் நோவுபடக் கண்டால் காருணிகனாகையாலே ஐயோவென்றீடுபட்டிருப்பன். ஸௌஹார்த்தவானாகையாலே ஆச்ரிதர்கள் அறிந்த காலத்தோடு அறியாத

காலத்தோடு வாசியற எல்லாக் காலத்திலும் அவர்களுக்கு ஸகலவித மங்களங்களை யும் ஆசம்ஸிப்பவனாயிருப்பன்; ஆச்ரித பரதந்த்ரனாகையாலே நிலாத்தென்றல் சந்த னம் தண்ணீர் முதலான அசேதநப் பொருள்களைப் போலே, தனக்கே யாயிருப்ப தும் தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருப்பதுமன்றிக்கே பிறர்க்கேயா யிருப்பன்;

ஸாம்ய குணயுக்தனாகையாலே அடியார்கள் திறத்தில் பிறப்பு அறிவு நடத்தை முதலியவற்றாலுண்டான தண்மை பாராமல் பரிமாறுவன்;

அசரண்யசரண்யனாகையாலே 'தாங்களும் தங்களுக்கு ரக்ஷகரன்று, பிறரும் தங்களுக்கு ரக்ஷகரன்று. என்று அறுதியிட்ட நிலைமையில் 'பற்றிலார் பற்ற நின் றானே!' என்கிறபடியே தான் ரக்ஷகனாயிருப்பன்;

ஸத்ய காமனாகையாலே *மாதவத்தோன்புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை* என்கிறபடியே நெடுங்காலத்திலே கடல் கொண்டுபோன ஸாந்தீபநி புத்ரனையும், *பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும்* என்கிற படியே ஜனித்தபோதே பெற்ற தாயும் காணப்பெறாதபடி நாய்ச்சிமார் தங்கள் ஸ்வாதந்த்ரியத்தாலே அழைப்பிக்கக் கைதப்பிப்போய் *சுடரொளியாய் நின்ற தன் னுடைச் சோதியிலே கிடந்த வைதிகன் பிள்ளைகளையும் அவ்வவ ரூபங்களோடே மீட்டுக்கொண்டு வந்து கொடுத்தாப்போலே அரியன செய்தும் அடியார் விரும் பினவற்றைத் தலைக்கட்டுவன்;

ஸத்ய ஸங்கல்பனாகையாலே, உத்தாநபாத புத்ரனான த்ருவனுக்கு ஸ்வர்க்க லோகத்தினுடைய மேலெல்லையிலே அபூர்வமாயிருப்பதொரு ஸ்தானத்தைக் கல்பித் துக் கொடுத்தாப்போலே அடியார்களுக்கு முன்பில்லாதவற்றையு முண்டாக்கிக் கொடுப்பவன்; இது அபூர்வ போக்யங்களை ஸ்ருஷ்டிக்க வல்ல அமோக ஸங்கல் பனாகையாலே.

[தந்தாம் ஸ்வம் தாந்தாம் விநியோகம் கொண்டாப்போலே யிருக்கத்தன்னை யும் தன்னுடைமையையும் வழங்கி] தங்கள் தங்கள் உடைமையைத் தாங்கள் தாங் கள் எடுத்து விநியோகம் கொள்ளுமாபோலே கொள்ளலாம்படி ஆத்மாத்மீயங் களைக் கொடுத்தருள்வன். இது ஔதார்ய குணத்தின் காரியம்.

[அவர்கள் காரியம் தலைக்கட்டினால் தான் க்ருதக்ருத்யனாய்] அடியார்களின் காரியம் நிறைவேறினால் அவர்கள் க்ருதக்குத்யராகையன்றிக்கே தான் க்ருதக்ருத் யனானதாக அபிமானிப்பன்; இது 'க்ருதீ' என்னும் குணத்தின் காரியம்.

[தான் செய்த நன்மைகளில் ஒன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக் ருதலவத்தையே நினைத்து ] தன் பக்கலிலே 'சரணம்' என்கிற உக்திமாத்ரமாகிற ஸுக்ருதலேசத்தைப் பண்ணினால் அவர்களுக்குத் தான் எல்லா நன்மைகளும் செய் தாலுங்கூட அவற்றை ஒன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருத லவத் தையே நினைத்திருப்பன். இது க்ருதஜ்ஞதா கார்யம்.

[அநாதிகாலம் வாஸிதங்களான ரஸங்களை மறக்கும்படி எல்லா தசையிலும் இனியனாய்] நெடுங்காலமே பிடித்துக் கொளுந்திக்கிடக்கிற ப்ராக்ருத விஷயரஸங் களை அறவே மறக்கும்படி ஸர்வாவஸ்தையிலும் இனியனாயிருப்பன். இது மாதுர்ய மென்னும் குணத்தின் காரியம்.

[பார்யாபுத்ரர்கள் குற்றங்களைக் காணக்கண்ணிட்டிருக்கும் புருஷனைப் போலே அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தால் நினையாதே] மக்கள் மனைவியருடனே கூடி வர்த்திப்பானொரு புருஷன் அவர்கள் செய்கிற குற்றங்களைக் கண்டிருக்கச்செய்தேயும் காணாதாரைப் போலே யிருக்குமாபோலே அடியார்கள் செய்த குற்றங்களைக் கண்டிருக்கச்செய்தேயும் திருவுள்ளத்தால் நினையாதிருப்பன். இது சாதுர்ய காரியம். அடியார்களின் குற்றங்களைத் தெரியாதபடி மறைக்க வல்லவனாகையே சாதுர்யம்.

[குற்றங்களைப் பெரிய பிராட்டியார் காட்டினாலும் அவளோடே மறுதலைத்துத் திண்ணியனாய் நின்று ரக்ஷித்து] சொன்னது செய்யவேண்டும்படி தனக்கு அபிமதையாய் சேதநர் குற்றங்களைப் பொறுப்பித்துச் சேரவிடுமவளான பெரிய பிராட்டி *தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்* என்கிறபடியே குற்றங்களைக் காட்டினாலும் *என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்* என்று அவளோடே மறுதலைத்து நிலைகுலையாதே நின்று ரக்ஷிப்பன். இது ஸ்தைர்யமென்னும் குணத்தின் கார்யம்.

[அவர்கள் பக்கல் கரணத்ரயத்தாலும் செவ்வியனாய்] மனமொழி மெய்கள் மூன்றிலும் செவ்வைக் கேடராயிருக்குமவர்கள் திறத்தில், நீர் ஏறாத மேடு நிலங்களிலே விரகாலே நீரேற்றுவாரைப்போலே தன்னை அமைத்து த்ரிகரணங்களாலும் செவ்வியனாய்ப் போருவன். இது ஆர்ஜவமென்னும் குணத்தின் காரியம்.

[பிரிந்தால் அவர்கள் வ்யஸநம் குளப்படி யென்னும்படி தானீடுபட்டு] *ஊர்த்வம் மாஸாத் ந ஜீவிஷ்யே* என்றால்,* ந ஜீவேயம் க்ஷணமபி* என்கிறபடியே தன்னைப் பிரிந்தால் அடியார்படும் வ்யஸனமானது, கடல் போன்ற தன் வ்யஸனத்துக்கு ஒரு குளம்படி மாத்திரமென்னும்படி தான் கிலேசப்படுவன். இது மார்தவமென்னும் குணத்தின் காரியம்.

[அவர்களுக்குப் பாங்காகத் தன்னைத் தாழ விட்டு] பிறவி அறிவு முதலானவற்றால் தண்ணியராயிருக்குமவர்களுக்கு அநுகூலமாக ஸர்வோத்க்ருஷ்டனான தன்னைத் தாழவிடுவன். இது ஸௌசீல்ய குணத்தின் காரியம்.

[அவர்களுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி எளியனாய்] அவதார தசையிலே நவநீத சௌர்ய வ்யாஜத்தாலே *ஓர் நெடுங்கயிற்றால் ஊரார்களெல்லாருங்காணவுரலோடே தீராவெகுளியளாய்ச் சிக்கன ஆர்த்து அடிப்ப* என்கிறபடியே யசோதாதிகளுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி எளியனாயிருப்பன். இது ஸௌலப்யகார்யம்.

[அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும் புல்லிடவந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலும் ஏற்குமா போலே பெரிய பிராட்டியாரையும் ஸூரிகளையும் விட்டு ஸ்நேஹித்துக்கொண்டு போரும்.] அன்று தான் பெற்ற கன்றுக்குத் தாயான பசு விரங்கி, முன்பு தான் ஸ்நேஹித்துக்கொண்டு போந்த முன்னணைக் கன்றையும் தனக்கு போக்யமான புல்லை யிடவந்தவர்களையுங்கூட மூசிக்கொம்பிலே கோத்தெடுப்பது குளம்பாலே மிதிப்பதாமாபோலே வல்லபையான பெரிய பிராட்டியாரையும், முன்பு ஸ்நேஹ விஷயமாய்ப் போந்த நித்யஸூரிகளையும் தள்ளிவிட்டு இன்று ஆச்ரயித்தவர்களை ஸ்நேஹித்துக்கொண்டு போருவன். இது வாத்ஸல்ய கார்யம். .... ... ... .... ... *

பிள்ளை லோகாசாரியர் திருவடிகளே சரணம்

# 5. மணவாளமாமுனிகள்

மணவாள மாமுனிகளுக்கு யதிவரபுநரவதார பூதரென்னும் ப்ரஸித்தி தொன்று தொட்டு விளங்கி வருகின்றது. எம்பெருமானாரே மீண்டும் மணவாள மாமுனிகளாகத் திருவவதரித் தருளினரென்றபடி. "ஏராருமெதிராசரென வுதித்தான் வாழியே" என்று உலகம் வாழ்த்துகின்றது. இதற்குரிய உப்பத்திகள் பலவுண்டு. அவற்றை அடைவே விளக்குகின்றேன்.

1. பெரும்பாலும் வியாக்கியானங்களருளிச் செய்வதிலேயே ஊக்கம் எம்பெருமானார்க்கும் மாமுனிகளுக்குமொக்கும்; ஸ்ரீபாஷ்யம் வேதாந்ததீபஸாரங்கள், கீதாபாஷ்யம் என்னு மிவை வியாக்கியான க்ரந்தங்களேயன்றோ? மாமுனிகளின் வியாக்கியான க்ரந்தங்களும் ப்ரஸித்தங்கள். வேதார்த்த ஸங்க்ரஹம், கத்யத்ரயம் என்று சில மூலக்ரந்தங்களும் ஸ்வாமி ஸாதித்தது போலே மாமுனிகளும் யதிராஜ விம்சதி உபதேசரத்தினமாலை முதலிய மூலக்ரந்தங்களுமருளிச்செய்ததும் ப்ரஸித்தம்.

2. அஸ்தாநே நிந்தாபரிஹாஸங்களை நிரப்பி நூல்களெழுதுவாரு முளரே; அங்ஙனம் நிந்தையையோ பரிஹாஸத்தையோ அணுவளவும் புகவிடாமல் பரமபவித்திர ஸ்ரீஸூக்திகளையருளுந்தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

3. தொட்ட தொட்ட விடமெங்கும் பலபல சாஸ்த்ரார்த்தத் திரள்களே மலிந்த ஸ்ரீஸூக்திகளினாலே பண்டிதர்களின் உள்ளத்தை உகப்பிக்குந்தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

4 எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யம் தொடங்கும்போதே "பகவத் போதாயந க்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:, தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே" என்றருளிச் செய்து பூர்வாசார்ய ஸூக்திகளில் தமக்குள்ள அபிநிவேசாதிசயத்தை விளங்கக் காட்டியருளினார். மாமுனிகளும் *முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டு* *முன்னவாரம் நங்குரவர் மொழிகள் உள்ளப் பெற்றோம், முழுதும் நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்* இத்யாதிகளாலே தமக்குள்ள பூர்வாசார்ய ஸூக்தி பஹுமானத்தைக் காட்டியருளினதோடு நில்லாமல் தம்முடைய வியாக்கியான க்ரந்தங்களைப் பூர்வாசார்ய ஸூக்திமயமாகவே அவதரிப்பித்தருளினார்.

5 ஸ்வாமியின் வாழி திருநாமத்திலே *மாறனுரை செய்த தமிழ் மறை வளர்த்தோன் வாழியே* என்று ஓதாநின்றோம். *ஆய்ந்த பெருஞ்சீரார் சடகோபன் செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராத வுள்ளம்பெற—ஏய்ந்த பெருங் கீர்த்தியிராமானுச முனிதன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்* என்று அக்காலத்து சிஷ்யவர்க்கங்கள் பணிக்கக் காணாநின்றோம். இதுபற்றி மாமுனிகள் திறத்திலே சொல்லவேணுமோ? *சேற்றுக் கமல வயல் சூழரங்கர் தம் சீர் தழைப்பப் போற்றித்தொழு நல்லவந்தணர்வாழ விப்பூதலத்தே, மாற்றற்ற செம்பொன் மணவாளமாமுனி வந்திலனேல், ஆற்றில் கரைத்த புளியல்லவோ தமிழாரணமே* என்ற வொரு பாசுரம் போதுமே.

6 ஸ்வாமி எழுபத்து நான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளை ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது ஸுப்ரஸித்தம். *லக்ஷ்மீ நாதாக்ய ஸிந்தௌ சடரிபுஜலத:* இத்யாதி ச்லோக ரத்னத்திலும் இது ஸுவ்யக்தம். மாமுனிகளும் "திரமாக திக்கஜங்களிட்டருளும் பெருமாள்" என்கிற படியே அஷ்ட திக்கஜாசாரியர்களை ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது நாடு நகரமும் நன்கறிந்தது.

7 *மன்னியதென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள்* என்றும், *ஸ்ரீரங்கம் கரிசைல மஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ ..... ஸ்ரீரங்கேச ஜயத்வஜோ விஜயதே ராமாநுஜோயம் முநி:* என்றும் சொல்லுகிறபடியே ஸ்வாமி ஸகல திவ்ய தேசங்களிலும் அபிமானம் காட்டியருளினவர்; மாமுனிகளும் *அடைவுடனே திருப்பதிகள் நடந்த வேர்வையாறவோ* என்கிறபடியே திவ்யதேச யாத்திரைகள் செய்தருளி அவற்றில் அபிமானம் காட்டியருளினபடி ஸுப்ரஸித்தம். திவ்ய தேச ச்ரேணியில் சேராதிருந்த ஸ்தலத்தைத் திவ்யதேசமாக அபிமானித்தலு மாம். ஸ்வாமி திருநாராயணபுரத்திற்கு *ஒரு நாயகமாய்* என்கிற திருவாய் மொழியை ஸமர்ப்பித்து அத் தலத்தை திவ்யதேசமாக அபிமானித் தருளினதும், மாமுனிகள் ராஜமன்னார் ஸன்னிதிக்கு *தீர்ப்பாரையாமினி* என்கிற திருவாய் மொழியை ஸமர்ப்பித்து அப்பதியை திவ்யதேசமாக அபிமானித் தருளினதும் அநுஸந்தேயம். [*வண்துவராபதிமன்னனை.*]

8. ஸ்வாமி சேஷாவதாரமென்பது ஸுப்ரஸித்தம். கருடவாஹன பண்டிதர் பணித்த திவ்யஸூரி சரிதத்திலும் வடுகநம்பி பணித்த யதிராஜ வைபவத்திலும் மற்றும் பல பிரபந்தங்களிலும் இது விசதம். மாமுனிகள் வரவரமுநிசதகத்திலே *துக்தோதந்வத்தவளமதுரம் சுத்தஸத்வைகரூபம் ரூபம் யஸ்ய ஸ்புடயதி தராம் யம் பணீந்த்ராவதாரம்" என்றருளிச்செய்தபடியும், மற்றும் சரித்ரப்ரஸித்தியின்படியும் திருவனந்தாழ்வான் திருவவதார பூதரென்பது ஸுவ்யக்தம்.

9 ஸ்வாமி யெம்பெருமானார் * தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே* என்று எண்டிசையும் வாழ்த்துகிறபடியும், கோயிலொழுகு முதலானவற்றில் காண்கிற இதிஹாஸ விஸ்தாரப்படியும் ஸ்ரீரங்கஸ்ரீயை வளர்த் தருளினவரென்பது விச்வவிதிதம். மணவாள மாமுனிகள் திறத்தும் இங்ஙனே யன்றோ? "அரங்கநகர்வாழ இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்றன்றோ நிச்சலும் வாழ்த்துகின்றதுலகம்.

ஆக இவ்வொன்பது படிகளாலே எம்பெருமானாரும் மணவாள மாமுனி களும் ஒற்றுமை பெற்றவர்களாவர். இவ்வொற்றுமைகளில், 1, 2, 3, லக்கமிட்ட நிருபணங்கள் மூன்றும் மிகமிகப்பொருத்தமானவை. இவை மூன்றும் இவ்விரு அஸாதாரணமானவை. .... ... ... ... .... *

ஸ்ரீ:

# ந்ருஸிம்ஹப்ரியா ஸமுத்போதனம்

## பத்ராதிபர்-P. B. A.

(ச்லோ.) நரஸிம்ஹப்ரியாக்க்யாயா: பத்ரிகாயா அநார்ஜவம்,
விஹாய விஸ்தரே பீதிம் விவ்ருணோமி ஸதாம்முதே.

(வெண்பா) சிங்கப் பிரியாவின் சேர்த்தியற்ற சின்மொழிகள்
எங்கும் விலை செல்லா வென்பதனைப்—பொங்குபுகழ்
வேதியர் களெல்லாரும் மேதினியில் மெச்சிடவே
ஓதுகின்ற திந்நூலுவந்து.

ஸ்ரீமான் R. செந்தாமரைக் கண்ணன் ஐயங்கார் என்பவர் பலவாண்டுகளாக நமக்கு நண்பர். மேட்டூர் டாமில் பல ஆண்டுகள் உத்யோகத்தில் அமர்ந்திருந்தார். இப்போது இரண்டு மூன்று வருஷங்களாகக் கோயம்புத்தூர் ஜில்லாவில் வாழ்ந்துவருகிறார். நாலாறு மாதங்கட்கு முன்பு நம்மிடம் வந்து இரண்டு நாள் தங்கியிருந்தார். இரவும் பகலும் பல புத்தகங்களைப் பரிசீலனை செய்வதே இவருடைய பணியாயிருந்தது. இவர் இங்கிருந்து புறப்பட்டுப்போன பிறகு "வடகலை தென்கலை ஸமரஸம்" என்கிற சிறு புத்தகமொன்றை அச்சிட்டு நமக்கனுப்பியிருந்தார். ஸ்ரீ ராமாநுஜன் 299-ல் wrapper 3-வது பக்கத்தில் அதைப்பற்றி நாம் வெளியிட்டிருப்பதாவது—

### "புத்தக வரவேற்பு

ஸ்ரீமான் R. செந்தாமரைக் கண்ணன் ஐயங்கார் எழுதிய "தென்கலை வடகலை ஸமரஸம்" என்கிற நூல் வரப்பெற்றோம். பெரும்பாலும் நமது நூல்களில் கண்ட விஷயங்களே இதில் இடம் பெற்றுள்ளன. லௌகிகவ்ருத்தியில் வாழ்ந்தாலும் மிகவும் நுணுக்கமான ஸம்ப்ரதாயக் கருத்துக்களை நன்குணர்ந்தவர் இவர் என்பது இந்நூலை வாசிப்பவர்களுக்கு நன்கு புலனாகும்" என்று.

இப்புத்தகத்தைப்பற்றி ந்ருஸிம்ஹப்ரியாவில் நேற்றைய புரட்டாசி ஸஞ்சிகையில் (ஸம்புடம் 32 ஸஞ்சிகை 6) பத்ராதிபர் எழுதியிருப்பதாவது—

### "புஸ்தக விமரிசனம்

### தென் கலை வடகலை ஸமரஸம் (இலவச வெளியீடு)

இந்த சுவடிக்குப் 'பழைய குப்பை' என்று பெயர் வைப்பதுதான் மிகவும் பொருத்தம். இதில் குறிப்பிட்டிருக்கும் விஷயங்கள் அனைத்தும் பலமுறை பிரசுரமாகி அநேக மஹாவித்வான்களால் நிர்மூலமாக்கப்பெற்றிருக்கின்றன. இந்தப் பழைய குப்பையைக் கிளறுவதனால் எவ்விதப்பயனும் ஏற்படப்போவதில்லை பழைய குப்பையை எழுதினவர் இரா. செந்தாமரைக் கண்ணன் என்று குறிப்பிடப்பெற்றிருக்கிறது. இதில் உள்ள வாக்யங்களையும் சைலியையும் ஆராய்ந்தால் இதை எழுதியவர் யார் என்பது சுலபமாக அனைவருக்கும் விளங்கிவிடும். இந்த மாதிரியான இந்திர ஜாலங்களால் உலகத்தை எத்தனை நாள் ஏமாற்றமுடியும்? இத்தகையவர்களுக்கு நல்ல புத்தியைத் தருமாறு தேவாதிதேவனைப் பிரார்த்திக்கிறோம்".

அன்பர்களே! ந்ருஸிம்ஹப்ரியாபத்திராதிபருடைய அடி வயிற்றெரிச்சலே வடிவெடுத்த இந்த வாக்யங்களைக் கண்டீர்களா! ஒவ்வோர் எழுத்தாக வாசித்துப்பாருங்கள். ரகுவம்சத்தில் (4-2) 'பூர்வம் ப்ரதூமிதோ ராஜ்ஞாம் ஹ்ருதயே அக்னிரிவோத்தித:" என்னப்பட்ட நிலைமை ந்ருஸிம்ஹப்ரியாபத்திராதிபரிடத்தில் எழுத்துத்தோறும் காணலாயிருக்கின்றதல்லவா! "தென்கலை வடகலை ஸமரஸம் என்கிற புத்தகத்தை எழுதியவர்

இரா. செந்தாமரைக்கண்ணனய்யங்கார் என்று குறிப்பிட்டிருக்கிறது இதில் உள்ள வாக்யங்களேயும் சைலியையும் ஆராய்ந்தால் இதை எழுதியவர் யார் என்பது சுலபமாக அனைவருக்கும் விளங்கிவிடும்'' என்று எழுதுகிறார் ந்ரு-பத்திராதிபர் இவருடைய கருத்து. என்னவென்றால் காஞ்சிபுரம் அண்ணங்கராசாரியர் தான் எழுதியது என்றறிவிப்பதே யாம். இது இவர் தெரிவித்து அறியவேண்டியதோ? ஸமரஸ புத்தகம் எழுதியவர் அதில் ஒளிக்காமல் உள்ளபடி எழுதியிருப்பதாவது:— (ஸமரஸ புத்தகம் பக்கம் 2–ல்) ''மத்தியில் ஒரு விஷயம் விஜ்ஞாபிக்கிறேன். நான் காஞ்சீபுரம் சுவாமிகளின் ஸ்ரீ ராமாநுஜன் பத்திரிகை யையும் அவருடைய மற்றும் பல நூல்களேயும் அநுபவித்து வருகிறவன். அவற்றிலுள்ள விஷயங்களே அன்புடன் ஆதரிப்பவனுமாவேன்.'' என்பதாம் இப்புத்தகத்தைப்பற்றி ஸ்ரீ ராமாநுஜனில் நான் எழுதியிருப்பதாக கீழே உதாஹரித்த வாக்கியத்திலும் ''இச்சமரஸ புத்தகத்தில் பெரும்பாலும் நமது நூல்களில் கண்ட விஷயங்களே இடம் பெற்றுள்ளன'' என்று எழுதப்பட்டுள்ளதை உலகம் முழுதும் கண்டிருக்கிறது ''ந்ரு'' பத்திராதிபர் புதிதாக என்ன அதிசயம் கண்டுபிடித்திருக்கிறார் என்பதை ஒவ்வொருவரும் விமர்சிக்கவேணும். ''அநந்வயம் க்லிஷ்டாந்வயம் முதலிய தோஷங்கள் ஒன்றுமின்றிக்கே ப்ரதிபக்ஷிகள் வாயைக் கையைத் திறக்க இடமில்லாதபடி—''வாய்திறக்கவுண்டோ வழி' என்று யாவரும் சொல்லும் படி எழுதப்பட்ட பத்தகம் ஒன்று கண்டால் அது அண்ணங்கராசாரியருடையதென்று யாவரும் எளிதாக அறுதியிடுவர்'' என்று கீர்த்தி மூர்த்தியான திருக்கோட்டியூர் ஸ்வாமியும் திருக்குடந்தை ராயம்பேட்டை கிருஷ்ணமாச்சாரியரும் கல்வெட்டு செய்திருக்கிற வார்த்தை, நூறு வருஷமானாலும் மறையாது. ''ப்ரத்யக்ஷ பரிகலிதமபி அர்த்தம் அநுமானேந புபுத்ஸந்தே தர்க்கரஸிகா:'' என்றார் ஒரு தார்க்கிகர். ''நஹி'' கரிணி த்ருஷ்டே சீத்காரேண தம் அநுமிமதே அநுமாதார:'' என்றும் அதற்கு நேர் முரணாக அவரே எழுதிவைத்தார் இவ்விரண்டு வாக்கியங்களேயும் ஸமந்வயப்படுத்தியுள்ளார்கள் இங்க 'ந்ரு'பத் த்திராதிபருடைய அசட்டு வார்த்தையை அசட்டு வார்த்தையென்றே விட்டுத் தொலேக்க வேணும்.

'ந்ரு' பத்ராதிபர் எழுதுகிறார் ''இந்தச் சுவடிக்குப் பழைய குப்பை என்று பெயர் வைப்பதுதான் மிகவும் பொருத்தம்'' என்று. இங்குக் கேண்மின் ஸ்வாமி தேசிகன் யதிராஜ ஸப்ததியில் (61) சிந்தாசேஷதுரர்த்ததந்துரவச: கந்தாசதச்ரந்தில: ஸித்தாந்தா ந ஸமிந்ததே யதிவர க்ரந்தாநுஸந்தாயிநி'' என்று பணித்தார். இதே ச்லோகத்தை ஸங்கல்ப ஸூர்யோதத்திலும் இரண்டாவது அங்கத்தில் பதிய வைத்துள்ளார். மதாந்தரஸ்த்தர்களின் கந்தைகளெல்லாம் பழைய குப்பையில் சேர்க்கத்தக்கவையென்பது இதன் கருத்து இதைக் கண்ட அநந்தக்ருஷ்ண சாஸ்த்ரியார் சததூஷணீ சண்டமாருதாதிகளேப் பழைய குப்பையில் சேர்க்கவேணுமென்று எழுதிவைத்தார். இப்படி எழுதிக்கொண்டு போவதற்கு எவ்விதமான வித்யாபரிச்ரமமும் வேண்டியதில்லை. அம்மையார்களும் எளிதாக எழுதிப்போகலாம். உண்மையான வித்வான்கள் இப்படி எழுதார்கள். விஷய சோதனத்தில் புகாமல் வசை மொழிகளேக் கொட்டுவது படித்தவர்களின் பணியன்று.

இதற்குமேல் இவர் எழுதுவதாவது ''இந்தமாதிரி இந்திர ஜாலங்களால் உலகத்தை எத்தனைநாள் ஏமாற்றமுடியும்?'' என்று. இங்கு என்ன இந்திரஜாலம்? என்ன உலக வஞ்சனை?

என்று இவரை மடிபிடித்துக்கேட்கிறோம் நம்மாழ்வார் திருவாய்மொழியில் "இந்திர ஞாலங்கள் காட்டி இவ்வேழுலகும் கொண்ட" என்கிறார். திரிவிக்கிரமாவதாரம் இந்திர ஜாலமென்னப்படுகிறது இதுவும் அத்தகைய இந்திர ஜாலமேயென்று தாராளமாகக் கொள்ளலாம். எம்பெருமானைப்பற்றி "தேந வஞ்சயதே' லோகாந்" என்கிறார்கள் மஹரிஷிகள். ஆழ்வார்கள் பலவிடங்களிலும் 'வஞ்சனே' என்று அவனை விளிக்கிறார்கள்.

"ஞாலங்கொள்வான் குறளாகிய வஞ்சனே" என்பது போன்ற பாசுரங்கள் பலநூற்றுக் கணக்காகவன்றோ உள்ளன; அந்த இந்திர ஜாலத்திலும் அந்த வஞ்சனையிலுமன்றோ உலகமெல்லாம் ஈடுபட்டுள்ளது. இத்தகைய உபாலம்ப வார்த்தைகளால் "ந்ரு" பத்திராதிபர் க்ருதக்ருத்யாராகிவிடப்பார்க்கிறார். பார்க்கட்டும். நெடுநாள் பார்க்கட்டும். வாழ்நாள் உள்ள வரையில் பார்க்கட்டும். "ந்ரு" பத்திராதிபர் மேலும் எழுதியிருப்பதாவது:-- "இதில் குறிப்பிட்டிருக்கும் விஷயங்கள் அனைத்தும் பலமுறை பிரசுரமாகி அநேக மஹாவித்வான்களால் நிர்மூலமாக்கப் பெற்றிருக்கின்றன" என்று. இந்த வாக்யத்தில் ஸமரஸ புத்தகத்தில் குறிப்பிடப்பட்டுள்ள விஷயங்கள் பலகால் பிரசுரமாகி இருப்பதாக காட்டியிருப்பது உண்மை. வாஸ்தவம், ஸத்யம், ப்ராமாணிகம் நிஜமானது, சிறிதும் பொய்யன்று. "இவை பல மஹா வித்வான்களால் நிர்மூலமாக்கப் பெற்றிருக்கின்றன" என்று எழுதியிருப்பது பச்சைப் பசும்பொய். பாமரர்களையும் வஞ்சிக்க மாட்டாதது. ஒரு வீரன் சொன்னானும் "நான் ஐந்நூறு வீரசூரர்களினுடைய கால்களையெல்லாம் வெட்டி விட்டு வந்தேன் இதோ" என்று. அதைக் கேட்டவர்கள் தலைகளை வெட்டாமல் கால்களை ஏன் வெட்டினாய், என்று வினவ? இரண்டு மாதங்களுக்கு முன்பு ஒருவர் தலைகளை யெல்லாம் வெட்டிவிட்டுப் போனபடியாலே கால்களையே நான் வெட்ட வேண்டியதாயிற்று, என்றானாம். அது ஹாஸ்ய ரஸத்திற்காவது உதவும். இவருடைய இவ் வஞ்சகப்பேச்சு எதற்கு உதவுமோ அறியோம்!



ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் என்கிற நான் நீங்கள் ப்ராமாணிகமாக எவ்வளவு எழுதினாலும் அவ்வளவுக்கும் உடனுக்குடனே நேர்மை குன்றாது விடையிறுத்து வருவேன் என்கிற ப்ரதிஜ்ஞையை முன்னம் தெரிவிக்கிறேன். இரண்டொரு வருஷமாக நான் கண்பார்வை குன்றியிருப்பதையறிந்து எதையும் எழுதிவெளியிட்டு வெற்றி பெற்று விடலாமென்று நினையாதீர்கள். எம்பெருமானைப்பற்றி *பச்யத்யசக்ஷு: ஸ ச்ருணோத்யகர்ண:* என்றோதியிருப்பதை அறிவீர்கள். அதேபோல நானும் "பச்யாம்யசக்ஷு: ஸ ச்ருணோமி அகர்ண:" என்று துணிந்து கூற த்த டை யி ல் லை. இங்கு நான் என்னுருவத்தைக் காட்டிக் கொண்டதைப்போல விடையிறுக்க நினைக்கிற நீங்களும் உருவத்தைக் காட்டிக் கொண்டு விஷயங்களை எழுதுங்கள். ஸமரஸ புத்தகத்திலுள்ள விஷயங்கள் பெரும்பாலும் எனது பல நூல்களிலுள்ளவை என்பதைச் செந்தாமரைக் கண்ணர் தாமே காட்டியுள்ளார். நானும் (ந்ரு-பத்ராதிபர் எழுதுவதற்கு முன்னமே) ஸ்ரீராமாநுஜன் மூலமாகவே அறிவித்துள்ளேன். இவ்விஷயங்களெல்லாம் என்றைக்கோ மாய்ந்துபோனவை என்று (ந்ரு-பத்ராதிபர்) இலேசாக எழுதிவிடுவதனால் உலகம் ஒரு மூலையிலும் வஞ்சிக்கப்பட்டதாக மாட்டாதென்பதை ஒவ்வொருவரும் நன்குணர்ந்திருந்தாலும் நான் விவரித்து நிரூபிக்கக் கடமைப்பட்டவன். அக்கடமையைச் செலுத்துகிறேன். ஸமரஸ புத்தகத்திலுள்ள விஷயங்களை ஒவ்வொன்றாக எடுத்துக் காட்டிப் பாசி படராமே அலசுகிறேன்.

ஸமரஸகாரர் முந்துற முன்னம் திருவல்லிக்கேணி வ்யவஹார விஷயமொன்று எழுதியுள்ளார். அதாவது "சில வருடங்களுக்கு முன்பு நான் திருவல்லிக்கேணி சென்றிருந்த போது அந்த தேவஸ்த்தானத்தைப்பற்றி இதிகாசமொன்று கேள்விப்பட்டேன். (அதாவது) உலகம் பரவிய கீர்த்தி பெற்ற ஸ்ரீமான் வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் சுவாமிகள் ஹைகோர்ட் ஜட்ஜாக இருந்தபோது சென்னையிலுள்ள வடகலையார் சிலர் ஒரு விவகாரம் தொடுத்தார்கள். (அதாவது) ஸ்ரீ பார்த்தஸாரதி தேவஸ்தானத்தில் வேதாந்த தேசிகர் எழுந்தருளியிருப்பதால் அவருடைய ஸன்னிதியிலும் திருவீதிப் புறப்பாடுகளிலும் நாங்கள் தேசிகப்ரபந்தம் சொல்ல அனுமதிக்க வேண்டுமென்று. இது அவருடைய கோர்ட்டில் பரிசீலனைக்கு வந்தது இதில் அவர் எழுதிய ஜட்ஜ்மெண்டாவது 'நான் பத்தாவது வயது முதலாக அடிக்கடி திருவல்லிக்கேணி கோவிலுக்கு போவதுண்டு. வடகலையாருக்கு அவ்விடத்தில் எவ்விதமான பாத்தியமும் இருந்ததாகத் தெரியவில்லை. இப்போது இவர்கள் விரும்புகிறபடி அனுமதித்தால் மூட்டைப் பூச்சிகளை எடுத்து சொக்காய் ஜேபியில் போட்டுக் கொண்டதுபோல்தானாகும்" என்று. இந்த ஜட்ஜ்மெண்டை நான் கண்ணாரக்கண்டேன். இப்படி உதார நிலைமையில் தீர்ப்பு சொல்லக்கூடிய ஜட்ஜ் அவரொருவரேயாவர்" என்று.

அன்பர்களே! நான் பலகால் திருவல்லிக்கேணிக்குச் சென்றிருந்தாலும் இது என் காதில் படவில்லை. இதில் கண்ட பின்பு அங்குள்ள பெரியார்களைக் கேட்டதில், "இது ஜகத்ப்ரஸித்தமான விஷயமாச்சே" என்றார்கள். அந்த ரிகார்டுகளைக் கொணர்ந்து வாசித்துங் காட்டி, "இதன் பிறகு தான் ஸ்ரீபெரும்புதூர் ஸன்னிதியில் மன்றாடத் தொடங்கினார்கள். அதுவும் ஏழெட்டு வருஷங்கட்கு முன்பு அலம்பிக் கவிழ்க்கப்பட்டது." என்றார்கள். இது கிடக்க.

ஸமரஸர் எழுதியுள்ள அடுத்த விஷயம்--

"ஆழ்வார் திருநகரியில் இன்றைக்கும் ஒரு வடகலை திருமாளிகை கிடையாது. அவ்விடத்திலும் வேதாந்த தேசிகர் எழுந்தருளியிருப்பதை யாவருமறிவர். அவர் தென்கலை ஸம்ப்ரதாயத்திற்கு எதிர்த்தட்டாக இருந்திருந்தால் இது நடக்க ஸம்பாவிதமா என்பதை ஒவ்வொருவரும் ஆலோசித்துப் பார்க்கலாம். ஸ்ரீரங்கம் தேசிகர் ஸன்னதியை ஸ்ரீமதஹோபிலம் ஸ்வாமி கைக்கொண்டாரென்பதும் ஆழ்வார் திருநகரி தேசிகர் கோவிலை மைசூர் பரகால ஸ்வாமி கைக்கொண்டாரென்பதும் எந்த வருஷம் முதலாக என்பதை ஆராய்ச்சி செய்வார் இல்லாமற்போகவில்லை. இவ்விஷயத்தை இன்னமும் நாம் விரிவுபடுத்தாமல் சுருக்கிக் கொள்கிறோம். ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்குப் பொது ஆசார்யர்களில் ஒருவராயிருந்த தேசிகரை வடகலையார் தங்களுக்கே தனிப்பட்ட ஆசார்யராகக் கொண்ட காலம் மிகக்குறுகியது என்பதில் ஸந்தேஹமில்லை" என்று.

இந்த வாக்யராசியில் "ந்ரு" பத்ராதிபர் ஆக்ஷேபிக்க நினைக்கும் விஷயம் இன்னதென்று உலகமறியவேணும். ஒருவர் பிறர் எது சொன்னாலும் அதை தூஷிக்கவேணுமென்றே விரதம் கொண்டிருந்தார். அவரை நோக்கி யாரேனும் ஒருவர் "தவ மாதா பதிவ்ரதா" என்று சொன்னால் அதையும் அவர் கண்டித்தே தீருவராம். "என் மாதாவின் குற்றங்களை நீ என்ன கண்டாய், உனக்கு என்ன தெரியும், மம மாதா ஸ்வைரிணீ" என்று சொல்லி முடிப்பராம். அதே போல் இதையும் இவர் கண்டிக்கட்டுமே.

இதற்குமேல் ஸமரஸர் எழுதியிருப்பதாவது—

"எம்பெருமானுடைய க்ருபை ஸஹேதுகமா? நிர்ஹேதுகமா? ப்ரபத்தி உபாயமா அன்று? பிராட்டிக்குப் புருஷகாரத்வம் மட்டுமா மோக்ஷப்ரதத்வமும் உண்டா? உபாயாந்தரங்கள் ஸ்வரூப விருத்தமா, ஸ்வரூபாநுரூபமா? இவை போன்ற சில விஷயங்கள் ஸம்ப்ரதாய பேதங்களாகச் சொல்லப்பட்டு வருகின்றன. தேசிகருடைய ஸ்ரீ ஸூக்திகளிலிருந்து நிர்ணயம் செய்யப் புகுந்தால் தென்கலை ஸம்ப்ரதாயத்தைக் காட்டிலும் வேறுவகையான ஸம்ப்ரதாயம் அவருக்கிருந்ததாகச் சொல்லுவதற்கு இடமே இல்லை" என்று.

"ந்ரு" பத்ராதிபர்க்கு இந்த வார்த்தை அஸஹ்யமாயிருந்தால் இவர் செய்யவேண்டியது என்ன தெரியுமோ? ஸமரஸர் எடுத்துக்காட்டியுள்ள நான்கு விஷயங்களில் மட்டுமாவது தேசிகன் திருவுள்ளம் இன்னது என்பதை உலகமறிய இவர் நிரூபித்தாக வேண்டும். தென்கலை ஆசார்யர்களின் கொள்கைகளை கண்டித்தே தேசிகன் ஸித்தாந்தம் செய்திருக்கிறார் என்று நிரூபித்தாக வேண்டும். அதற்கோ வழியில்லை. உலகமறிய இங்கொன்று தெரிவிக்கிறேன். ஸ்ரீ ராமாநுஜன் 300ல் வேதாந்த தேசிக ஸிந்தாந்தஸாரம் என்றொருநூல் எழுதி வெளியிட்டிருக்கிறேன். அதைக் கண்ட பல பெரியோர்கள் "இது ஸம்ஸ்கிருத பாஷையிலும் வெளிவந்தால் உலகுக்கு பரமோபகாரமாயிருக்கும்" என்று தெரிவித்தார்கள். உடனே "நிகமாந்த குருத்தம நிர்ணயஸிந்து" என்னும் பெயரால் ஒரு வடநூல் எழுதி நேற்று தேசிகன் திருநக்ஷத்திரத்தன்று அதைப் பூர்த்தி செய்து இன்று (8--10--73) அச்சுக்கூடத்திற்கு அனுப்பியிருக்கிறேன். அது தேவநாகராக்ஷரத்தில் வெளிவரும். அதையும் இவர் விரைவில் காணப்பெறுவர். அது நிற்க. சென்ற மாதத்தில் வெளிவந்துள்ள வேதாந்த தேசிக ஸிந்தாந்த ஸாரம் என்கிற நமது நூலை இவர் ஆக்ஷேபிக்கிறாரா, ஆமோதிக்கிறாரா என்பதை உலகமறிய வேண்டாவா?

அதைக்கண்டிக்க யோக்யதை இருந்தால் கண்டிப்பது இல்லையா; அதை தான் நோக்கினதாகவே காட்டாமல் "தேசிக தர்சனதத்வம்" என்றோ, "தேசிக ஸித்தாந்ததத்வம்" என்றோ பெயரிட்டு தேசிகன் திருவுள்ளத்தை உலகமறிய அவருடைய ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு வெளியிடட்டுமே? உண்மையான வித்வான்களுக்கு அதுவன்றோ கர்த்தவ்யம்? பரபக்ஷ நிரஸனம் செய்யவேண்டா. ஸ்வபக்ஷ ஸ்தாபனத்தை ஒழுங்காகச் செய்து கொள்ளக் கடமைப்பட்டவர் அல்லவா இவர்?

இதற்குமேல் ஸமரஸர் எழுதியுள்ளதாவது--

"சுமார் 25 வருஷங்களுக்கு முன்பு உப்பிலியப்பன் ஸன்னிதி ஸ்ரீமான். உ.. வே. வித்வான். நவநீதம் ஸ்ரீராமதேசிகாசார் ஸ்வாமி தேசிகப்ரபந்தவுரை பதிப்பித்தார் என்பதை உலகமறியும். அதில் சென்னை அட்வகேட் உ. வே. D. ராமஸ்வாமி ஐயங்காரவர்கள் தேசிக சரிதம் எழுதி அதில் சேர்ப்பித்தார். அந்த சரித்திரத்தில் வேதாந்த தேசிகர் நிகமபரிமளம் என்ற பெயர்கொண்ட திருவாய்மொழி வ்யாக்யானமொன்று (எழுபத்துநாலாயிரப்படி) அருளிச்செய்து ஆறாயிரப்படிக்குப்பின் தோன்றிய வ்யாக்யானங்களிலுள்ள குற்றங்களையெல்லாம் களைந்து விட்டார் என்றெழுதியிருந்தார். அந்த நிகமபரிமளம் என்கிற வியாக்யானம் அப்போதே லோபமடைந்து விட்டது என்றும் எழுதியிருந்தார். அக்காலத்தில் நான் ஸ்ரீரங்கத்தில் உத்யோகஸ்தனுயிருந்தேன். அங்கு அம்ருதலஹரி பத்ரிகை வெளிவந்துகொண்டிருந்தது. அதில் "தேசிகப்ரபந்தவுரையாராய்ச்சி" என்கிறநூலை ஊக்கமுடன் வாசித்தேன். அதில் வேடிக்கையான கதையொன்று கண்டேன். அதை

அடிக்கடி நான் நினைத்து நானே சிரித்துக்கொள்வது வழக்கம். (அக்கதையாவது) ஒருவர்க்கு 60 வயதுவரை கல்யாணமாகவில்லை. தீர்க்க ப்ரஹ்மசாரியாகவிருந்தார். பரிஹாஸங்கள் பொறுக்கமுடியாமல் ஒரு வெளியூருக்குச் சென்று அங்கே தனக்கு விவாஹம் நடப்பதாக ஒரு சுபபத்ரிகை அச்சிட்டு அது விவாஹ தேதிக்கு பின்பு பந்துக்களுக்கு கிடைக்கும்படி அனுப்பி, இரண்டொருமாதம் அங்குமிங்கும் திரிந்துவிட்டு ஒரு நாள் அந்த மனைவி ஆசார்யன் திருவடி அடைந்துவிட்டதாக பந்துக்களுக்கு எழுதி விட்டுச் சில நாள் பொறுத்து ஊர் வந்து சேர்ந்து "அவளுடைய குரல் எப்படியிருக்கும் தெரியுமா! அவளுடைய கூந்தல் என்ன அழகு தெரியுமா!" என்று புலம்பிக்கொண்டே காலங்கழித்தாராம். நிகமபரிமளத்தின் நிலைமை இதுவே போலும்! அஹோபில மடத்தின் ஆஸ்தான வித்வான்களில் ஒருவரான ஸ்ரீ உ. வே. திருக்கள்ளம் நாஸிம்ஹராகவாசார்ய சுவாமிகள் இந்த நிகமபரிமளம் தோன்றினதாகச் சொல்லுவதற்கு இடமில்லை என்று காட்டி வைகுண்டவாஸியான ஸ்ரீமதுபயவே காரப்பங்காடு ஸ்வாமியின் ஷஷ்ட்யப்த பூர்த்தி மலரில் ஒரு கட்டுரை வெளியிட்டிருக்கிறார் என்பது உலகமறிந்த விஷயம். இதெல்லாம் ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக எழுதியவை. நிகமபரிமளம் எப்போது லோபமடைந்தது என்பதை D. ராமஸ்வாமி ஐயங்கார் அவர்களைக்கேட்டால் "எனக்குத்தெரியாது" என்பார். ஆறாயிரப்படிக்குப்பின் தோன்றிய வியாக்கியானங்களிலுள்ள குற்றங்களையெல்லாம் களைவதற்காகவே நிகமபரிமளம் தோன்றினதாக எழுதினீரே, எது கொண்டு எழுதினீர்?" என்று கேட்டால் திசைகள் தோறும் விழிப்பர். ஆறாயிரப்படிக்குப்பின் தோன்றிய வ்யாக்யானங்கள் எவையென்றால் நஞ்சீயர் அருளிய ஒன்பதினாயிரப்படி, பெரியவாச்சான் பிள்ளையருளிய இருபத்துநாலாயிரப்படி, வடக்குத் திருவீதிப்பிள்ளை பட்டோலை கொண்ட ஈடுமுப்பத்தாறாயிரப்படி. வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்த பன்னீராயிரப்படி ஆகிய இந்த நான்கு வ்யாக்யானங்களாகும். இவற்றில் ஈடுமுப்பத்தாறாயிரப்படி ஒன்று தவிர மற்ற மூன்று வ்யாக்யானங்களும் தேசிகர் காலத்தில் ப்ரசாரத்தில் இருந்தவை. ஆனாலும் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த இருபத்துநாலாயிரமொன்றே முக்கிய காலக்ஷேப க்ரந்தமாய் விளங்கி வந்தது. அதைத்தான் தேசிகர் காலக்ஷேபம் செய்தார் என்பது பேர்க்கவும் பேராதபடி விளங்கி நின்றது. காலக்ஷேப முறையில் கேட்கவில்லையென்று சிலர் சொல்லவந்தாலும் அந்த வ்யாக்யானங்கொண்டேதான் தேசிகர் திருவாய்மொழிப்பொருளை உணரப்பெற்றார் என்பதை அசைக்க முடியாமல் நிரூபித்து வைத்திருக்கிறார்கள். இன்னொரு முக்கியமான விஷயம் கேளுங்கள். திருவாய்மொழிக்கு இத்தனை வ்யாக்யானங்கள் அவதரித்திருந்தன என்பதை மணவாள மாமுனிகளின் உபதேசரத்தினமாலைப் பாசுரங்கொண்டு உலகமறிந்ததேயொழிய அவ்வக்காலங்களில் இருந்தவர்கள் பெரும்பாலும் தெரிந்துகொள்ளாமல்தான் இருந்தார்கள். "தெள்ளாரும் ஞானத்திருக்குருகைப்பிரான் பிள்ளான் எதிராசர் பேரருளால் உள்ளாரும் அன்புடனே மாறன் மறைப்பொருளை யன்றுரைத்தது இன்பமிகு மாறாயிரம்" என்கிற உபதேசரத்தின மாலைப்பாசுரம் அவதரித்தபிறகுதான் பிள்ளானுடைய வ்யாக்யான க்ரந்தமொன்று அவதரித்திருக்கிறதென்பதை உலகமறிந்தது என்று துணிந்து சொல்லலாம்" என்று.

இந்த வாக்யச்ரேணியில் பல விஷயங்கள் காணப்படுகின்றன. "ந்ரு" பத்ராதிபர் எந்தெந்த விஷயங்களை மறுக்க விரும்புகிறார் என்பது தெரியவேணும். உப்பிலியப்பன் ஸன்னிதி ஸ்வாமி தேசிக ப்ரபந்த உரை வெளியிட்டது பொய்யென்கிறாரா? அதில்

**D. R** என்பவர் தேசிக சரித்திரம் எழுதிச் சேர்த்திருப்பது பொய்யென்கிருரா? அந்தச் சரித்திரத்தில் "திருவாய்மொழிக்குத் தோன்றியுள்ள வ்யாக்யானங்களில் உள்ள குற்றங் குறைகளெல்லாம் களைந்தொழிக்கப்பட்டன" வென்றெழுதியது பொய்யென்கிருரா? மேலும் கேள்விகளை நிறுத்திக் கொண்டு இப்போது கேட்டிருக்கும் கேள்விகள் வரையில் ஆற அமர ஆராய்வோம். நாம் கேட்டிருக்கிற கேள்விகளில் ஒன்றையும் பொய்யென்ன முடியாது இவரால் D. R. என்பவர் உலகின் பாக்கியத்திஞல் இன்னமும் வாழ்ந்து வருகிருர். அவரை இவர் அடிபணிந்து கேட்கவேணும். என்ன கேட்கவேணும்? "நிகமபரிமளத்தைத் தேவரீர் கடாக்ஷித்திருப்பதுண்டோ?" (அவர் சொல்லக் கூடிய பதில்) "நிகமபரிமளத்தின் ப்ராகபாவதசையிலேயே ப்ரத்வம்ஸாபாவமும் அத்யந்தாபாவமும் ஆய்விட்டதே! நான் எங்ஙனே அதைப் பார்க்கமுடியும்?" என்று. அதற்கு மேல், "அதிலுள்ள விஷயங்கள் இன்னின்னவை என்று அறிவீரோ?" என்று கேட்பது. "ககநாரவிந்தமும் சசவிஷாணமு மான அப்புத்தகத்திலுள்ளதை நான் எப்படிப் பார்த்திருக்க முடியும்?" என்பர் அதற்கு மேல், "ஆருயிரப்படிக்குப் பின் தோன்றின திருவாய்மொழி வ்யாக்யானங்களையாவது பார்த்திருக் கிறீரோ?" என்று கேட்டால் அதுவுமில்லையென்பர். ஆருயிரப்படியைத் தேசிகன் எங்கே யாவது தொட்டிருக்கிருரா? அதையாவது பார்த்திருக்கிறீரா? என்று கேட்டால் ...இதை யாவது அவச்யம் கேட்டுப் பார்க்கவேண்டும். நீங்கள் கேட்பதும் அவர் விடை கூறுவதும் கனவிலுங் காணமுடியாதவை.

ஸமரஸர் மேலும் எழுதி இருப்பதாவது—

"வேதாந்த தேசிகர் தமது ரஹஸ்யங்களில் பல ஆசார்யர்களின் பெயரையும் நூல்களையும் அடிக்கடி ப்ரஸ்தாவித்திருக்கிருர். திருக்குருகைப்பிரான் பிள்ளானுடைய திருநாமத்தையும் அவருடைய ஆருயிரப்படியையும் ஓரிடத்திலாவது தொட்டிருக் கிருரா என்று காஞ்சீபுரம் ஸ்வாமிகள் ஸமீப காலத்தில் ஒரு நூலில் எழுதியிருந்ததை வாசித்தேன். D ராமஸ்வாமி ஐயங்கார் அவர்களும் வாசித்தேயிருப்பார். அதற்கு ஏதாவது விடை எழுதினுரா என்பது எனக்கு தெரியவில்லை. பிள்ளான் திருநாமத்தை தேசிகர் அடியோடு தொடாமலில்லை. ஸ்ரீவசனபூஷணத்தில் பிள்ளை லோகாசார்யர் பிள்ளான் அருளிச்செய்திருந்த இரண்டு அர்த்தங்களை விளக்கியிருந்தவிடத்தில் தாம் மறுப்பு எழுதுவதற்காக 'பிள்ளான்" என்று தொட்டிருப்பதுண்டு அப்படிப்பட்ட இரண்டிடங்களில் ஓரிடத்தில் "அவருக்கு இப்படி தாத்பர்யம்" என்றெழுதினுர். மற் ற்ரேரிடத்தில் கண்டனமே எழுதி முடித்தார். வைகுண்டவாஸியான ஸ்ரீமத்பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகிய சிங்கர் செய்தருளிய ரஹஸ்யத்ரயஸார வ்யாக்யானத்தில் பிள்ளான் ஸ்ரீஸூக்தி கண்டிக்கப்பட்டதாகவே விளக்கப்பட்டிருக்கிறது. அல்பஜ்ஞனை நான் கண்டுபிடித்து சொல்லுவதுமன்று. இந்த்ரஜாலமுமன்று. காஞ்சீபுரம் ஸ்வாமியின் நூல்களில் கண்ட நிரூபணங்களைப் பெரியாரிடம் விளங்கக் கேட்டு எழுதுபவை இவை."

என்கிற இந்த வாக்கியங்களில் காஞ்சீபுரம் அண்ணங்கராச்சாரியாராகிய என்னு டைய பெயர் வெட்ட வெளிச்சமாகவே குறிப்பிடப் பெற்றுள்ளது. உண்மையில் நாம் பல

கால் எழுதி வெளியிட்ட வாக்கியங்களே இவை. வடகலை வித்வான்களிடமிருந்து இவற்றுக்கு 30 வருஷங்களுக்கு மேலாகவே விடை எதிர்பார்த்து வருகிறேன். "பல மகா வித்வான்களால் நிர்மூலமாக்கப்பட்டன" என்று எழுதி இருக்கிற 'ந்ரு' பத்ராதிபர் படித்தவராய் இருந்தால் இப்போதாவது நிர்மூலமாக்கட்டும், அல்லது ஏற்கெனவே நிர்மூல மாக்கப்பட்டிருக்கிறபடியை எடுத்துக் காட்டட்டும்.

இந்த விஷயத்தை இப்போது நான் சிறிது விளக்கி எழுதுகிறேன் காண்மின்.

**தேசிக** ரஹஸ்யங்களில் ஸ்ரீமந் நாதமுனிகள் தொடங்கியுள்ள பற்பல ஆசார்யர்களின் திருநாமங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. திருநாமங்கள் மட்டுமன்றிக்கே அவர்களின் ஸ்ரீ ஸூக்திகளும் மலவிடங்களில் பொறிக்கப்பட்டுள்ளன. ஸ்ரீமந் நாதமுனிகள், உய்யக் கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார், எம்பெருமானுர், கூரத்தாழ்வான், எம்பார், நஞ்சீயர், பெரியஜீயர்— இப்படிப் பல ஆசார்யர்களின் திருநாமங்களை வாய்வெருவி யுள்ளார் பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யான ஸ்ரீ ஸூக்திகளையும் உதாஹரித்துள்ளார் திருக்குருகைப் பிரான் பிள்ளானுடைய திருநாமத்தை ஓரிடத்திலாவது ப்ரஸ்தாவித்திருப்ப துண்டா? ஆறுயிரப்படியையாவது தொட்டிருப்பதுண்டா? இதை நாம் கண்டு பிடித்துக் கேட்கிருேமென்று நம்மேல் இவர்கள் சீறிவிழலாமேயொழிய ஆர்ஜவத்தோடு ஒன்றும் வாய் திறக்க முடியாது. மிகப்பெரிய விசேஷமொன்று. ஸ்ரீ வசனபூஷணத்தில் பிள்ளானுடைய ஸ்ரீ ஸூக்திகளை இரண்டிடத்தில் உதாஹரித்தருளியுள்ளார். "தன்னால் வரும் நன்மை விலைப்பால் போலே. அவனால் வரும் நன்மை முலைப்பால் போலே" என்பது ஒரு ஸ்ரீஸூக்தி 'மதிராபிந்து மிச்ரமான சாதகும்பமய கும்பகத தீர்த்தஸலிலம் போலே அஹங்காரமிச்ரமான உபாயாந்தரம்" என்பது மற்றொரு ஸ்ரீ ஸூக்தி. இவ்விரண்டையும் ப்ரஸ்தாவிக்க நினைத்த தேசிகன் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் சரம்ச்லோகாதிகாரத்தில், "இப்படி பக்த்யாதிகள் போலே சரணாகதி தர்மமும் கர்த்தவ்யமாக விதிக்கப்படுகையால் 'தன்னால் வரும் நன்மை விலைப்பால் போலே,... என்று பிள்ளான் வார்த்தைக்கு... தாத்பர்யம்" என்றெழுதுகையில் 'பிள்ளான்' என்று ப்ரஸ்தாவித்திருப்பது தவிர வேறில்லை. பிள்ளானுடைய மற்றொரு ஸ்ரீஸூக்தியாகக் கீழே நாம் உதாஹரித்துள்ள மதிராபிந்து மிச்ரமான இத்யாதி ஸூக்திக்கு ஒரு தாத்பர்ய கல்பனமும் பண்ண முடியாமையாலே அதைக் கண்டித்துத் தொலைப்பதுதான் கர்த்தவ்யம் என்று துணிந்து அங்கு பிள்ளான் என்கிற பெயரைத் தொடாமலே 'மத்யோப ஹத பாத்ரஸ்த்த தீர்த்த த்ருஷ்டாந்த வர்ணநம், அஹங்காரந்வயே து ஸ்யாத் ப்ரபத்தாவபி பக்திவத்." என்று ஒரு காரிகையிட்டு க்ருதக்ருத்யராய் விட்டார். இந்த காரிகை எங்கிருக் கிறது தெரியுமோ? பிள்ளானுடைய வார்த்தைக்குத் தாத்பர்யம் கல்பித்து முடித்தாரே, அதற்கு அடுத்தபடியாகவுள்ளது. இது பிள்ளானுடைய ஸ்ரீ ஸூக்திக்குக் கண்டனமன்று என்று வாய் திறக்க வொண்ணுதபடி அவருடைய ஸ்ரீ ஸூக்திக்கே கண்டனமென்பதைக் குன்றிலிட்ட விளக்குப் போலே வ்யாக்யானித்து வைத்திருக்கிறார் உம்முடைய தாத்தா. மதிராபிந்து மிச்ரமான இத்யாதி ஸ்ரீ ஸூக்தியை உதாஹரித்து "பிள்ளான் இப்படி ஒரு காலும் ஸாதித்திருக்கமாட்டார். இது ஆரோப மாத்ரம்" என்றெழுதியிருந்தால் இவர்கள் ஏதாவது மெல்லலாம். மூலகாரரும் அப்படி எழுதவில்லை. வ்யாக்யாதாவும் அப்படி எழுத வில்லை. "மத்யோபஹத பாத்ரஸ்த தீர்த்த த்ருஷ்டாந்தவர்ணநம்" என்கிற காரிகைக்குத் தாத்தா வ்யாக்யானம் எழுதும்போது யாத்ருச்சிகமாக உடனிருந்தேன் நான். அப்போது

தாதா கேட்டார், "மத்யோபஹத பாத்ரஸ்த தீர்த்தத்ருஷ்டாந்த வர்ணநம்" எங்குள்ளது, யாருடையது தெரியுமோ?" என்று. உடனே ஸவ்யாக்க்யான ஸ்ரீவசன பூஷண ஸ்ரீகோசத்தை எடுத்துவரச் சொல்லித் "திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிக்கும்படி" இத்யாதி ஸ்ரீ ஸூக்திகளைச் சேவிக்கச் செய்தேன். ஸேவித்தார், நிலைகலங்கினார், ஒரு நாழிகை முசித்துக் கிடந்தார். ப்ராமாணிகராகையாலே எழுத வேண்டியதை எழுதினார். பேரன் எடுத்துப்பார்க்கலாம். "பிள்ளான் இப்படி ஸாதித்திருக்கமாட்டார்" என்று ஒரே வார்த்தையில் முடித்துப் போகலாமாயிருக்க ..... மேலே என்ன எழுதுவது!

பிள்ளானிடத்தில் தேசிகனுடைய ப்ரதிபத்தி இங்ஙனேயிருக்க, பிள்ளான் ஆருயிரப் படியென்று ஒரு வ்யாக்யானம் அருளிச் செய்திருக்கிறார் என்பதைக்கூட தேசிகன் அறியாதிருக்க, ஆருயிரப்படிக்கு வ்யாக்யானமாக நிகமபரிமளம் ஸாதித்தாரென்றும் அதில் ஆருயிரப்படிக்குப்பின் தோன்றின வ்யாக்யானங்களிலுள்ள குற்றங்குறைகளைக் களைந் தொழித்தாரென்றும் ஒருவர் எழுதினால் உலகோ உறங்குமே! பழையகுப்பையில் சேர்க்கப் படவேண்டிய சுவடி எது என்று இப்போது சொல்லட்டுமிவர். தேசிகன் அபராதபரிஹாராதிகாரத்திலே "அநுதாபாத் உபரமாத் ப்ராயச்சித்தோந்முகத்த்வத:,தத்பூரணாச்சாபராதா: ஸர்வே நச்யந்தி பாதக:" என்று ஸாதிக்கிற படியானாலொழிய உய்யும் வகையுண்டோ?

ப்ராமாணிக ஸஹ்ருதயர்களே! ஸமரஸரால் ப்ரஸ்தாவிக்கப்பட்டுள்ள ஸ்ரீமதுபயவே திருக்கள்ளம் ஸ்வாமிகள் ந்ருஸிம்ஹப் பிரியாவோடு நெருங்கிய தொடர்புடையவர் என்று கேள்விப்படுகிறோம். ஆனால் நமக்கு நேரில் தெரியாது. ஆனாலும் அவர் சிறந்த வித்வான் என்றும் ப்ராமாணிகர் என்றும் கொண்டிருக்கிறோம். அவர் பெரிய வாச்சான் பிள்ளை வ்யாக்யானங்களைப்பற்றி தேசிகன் புகழ்ந்து பேசியதாக எழுதியிருந்த கட்டுரையை அப்போதே நான் பண்டித போக்ய பஞ்சாமிருத்ததில் விளக்கியிருக்கிறேன். அதையே செந்தாமரைக் கண்ணர் எடுத்தெழுதியுள்ளார். இவ்விஷயத்தில் ஸாரமாக விஜ்ஞாபிக்கிறேன். ஒரு தென்கலை வக்கீல் "தேசிகரஹஸ்யங்களிலுள்ள அபத்தங்களை அடியறுப்பதற்காக வாதிகேஸரி ஜீயர் ரஹஸ்யஸௌரபம் அருளிச்செய்தார்." என்றெழுதி வெளியிட்டிருந்தாராகில் வடகலை கோஷ்டியில் எவ்வளவு அமர்க்களம் நடந்திருக்கும் தெரியுமா? *D. R.* அய்யங்கார் ஒரு ந்யாய வாதி என்று பேர்பெற்றிருந்து வீணாக இவ்வளவு சச்சரவுகளை வளரச்செய்தாரே! என்றென்றோ "ந்ரு" பத்ராதிபர் வருத்தம் காட்டியிருக்கவேண்டும்.

ஸமரஸர் மேலும் எழுதியிருப்பதாவது:—

"இந்நூலுக்கு நாம் "தென்கலை வடகலை ஸமரஸம்" என்று மகுடமிட்டிருக்கிறோம். அந்த மகுடத்திற்கும் இதுவரை நாம் எழுதிவந்த விஷயங்களுக்கும் என்ன ஸம்பந்தமென்றால் வீணான துராக்ரஹத்தோடு யதார்த்தஜ்ஞான மற்றவர்கள் எழுதியுள்ள விஷயங்களைக் கண்டு பாமரர்கள் மயங்காதபடி செய்து ஸமரஸப் பான்மையை ந்ருஸிம்ஹப்ரியாவும் ஸுதர்சனமும் வளர்க்க வேண்டுமென்பதே நமது நோக்கம்" என்று.

இது செந்தாமரைக்கண்ணருடைய தூய்மையான உள்ளத்தைக் காட்டுகிறது. இது மத்யஸ்தர்களால் மிகவும் போற்றத்தக்கதேயல்லவா?

ஸமரஸ புத்தகத்தில் பக்கம் 5ல் மேலும் எழுதியிருப்பதாவது:—

"பூர்வாசார்யர்கள் வாழ்ந்த காலத்தில் ஒருவர்க்கொருவர் பிணங்கினதாக ஒரு க்ரந்

தத்தினுலும் நாம் தெரிந்து கொள்ள முடிவதில்லை. தேசிகர் "நாண் பெரியோமல்லோம் நாம் நன்றும் தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" என்று பணித்திருப்பதைக் காணும்போது அவர் ஸகல ஆசார்யர்களோடும் ஒத்து வாழ்ந்ததாகவே நன்கறியக் கிடக்கிறது. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் பெரிய திருமொழியிலுள்ள குலந்தரு மென்கிற பாட்டின் பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யான ஸ்ரீஸூக்திகளை அப்படியே உதாஹரித்து "குலந்தருமென்கிற பாட்டின் வ்யாக்யானத்திலே அபியுக்தரும் பணித்தார்" என்றெழுதிவைத்திருப்பதை நோக்கும்போது அவருடைய காலத்தில் பெரிய வாச்சான் பிள்ளையின் வ்யாக்யானங்கள் காலக்ஷேபப்ரசாரத்திலிருந்து வந்தனவென்பது நிராக்ஷேபமாகத் தெரியவருகிறது. அவர் பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளை எத்தனை க்ரந்தங்களில் எத்தனை இடங்களில் கையாண்டிருக்கிறுரென்பதைக் காஞ்சீபுரம் ஸ்வாமிகள் பலகால் பலநூல்களில் எடுத்துக் காட்டியிருப்பதை உலகம் மறந்திராது. மறைக்கவும் முடியாது. த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியும் த்ரமிடோபநிஷத் ஸாரமும் பெரியவாச்சான் பிள்ளையின் வ்யாக்யானத்தைக் கையில் வைத்துக்கொண்டே எழுதப்பட்டவை என்பதை யாரேனும் மறுக்கமுடியுமா?"—என்று.

அன்பர்களே! இந்த வாக்கியங்கள் எனது நூல்களிலிருந்து அப்படி அப்படியே எடுத்தாளப்பட்டவை என்பதை யாரேனும் மறுக்கமுடியுமோ? மறைக்கமுடியுமோ? *D. R.* ஐயங்கார் எழுதின தேசிக சரித்திரத்தில் உண்மைக்கு மாறாக எழுதப்பட்டிருந்த விஷயங்களுக்குக் கண்டனமாக தோன்றியுள்ள மேலே கொடுத்த வாக்யங்களை பொன்னேபோல் போற்ற வேண்டாவா? "தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திக்குப் பொற்கவசமிட்டவர்," என்கிற உண்மையை மறைத்து ஒருவர் எழுதினுல் அதையன்றோ பழைய குப்பையில் சேர்க்க வேண்டும்? தேசிகன் "நாண் பெரியோமல்லோம் நாம் நன்றும் தீதும் நமக்குரைப்பாருள ரென்று நாடுவோமே" என்கிற வினய பேசலமான பாசுரத்தை அமலனுதிபிரான் வ்யாக்கியானத்தில் இடவேண்டிய காரணமென்ன? அந்த வ்யாக்யானத்திற்கு முனிவாஹனபோகமென்று திருநாமம் சாற்ற வேண்டிய காரணந்தானென்ன? என்று கேட்டிருக்கிற கேள்விகளுக்கு விடையிறுப்பாருளரோ?

ஸமரஸ புத்தகத்தின் முடிவுரையாவது:—

"தேசிகருடைய சரித்திரத்தை அநீதியாகவும் தவருகவும் பொய்யாகவும் துராக்ரஹமயமாகவும் எழுதினவர் *D. R.* என்கிற அட்வகேட். அதை வெளியிட்டவர் உப்பிலியப்பன்ஸன்னதி நவநீதம் ஸ்ரீராம தேசிகாசாரியர். அந்த வெளியீட்டின் மேல் தான் பலபல சச்சரவு நூல்கள் தோன்றின வென்பதை உலகமறியும். அதையெல்லாம் கண்டு அநுதாபமுற்ற அந்த உப்பிலியப்பன் ஸ்வாமிகள் 'தேசிக சரித்திரத்தில் தவறுகள் சேர்ந்திருப்பது உண்மைதான்' என்று இசைந்து எழுதி வெளியிட்டார். இவ்வாருகவே உலகம் பரவியுள்ள தவருன விஷயங்களை அவரவர்கள் அநுதாபங் காட்டித் "தவறுதான். உண்மைக்கு மாறுதான்" என்று வெளியிட்டுவிட்டால் தென்கலை வடகலை ஸமரஸம் தன்னடையே ஏற்பட்டுவிடும். அப்படியல்லாமல் சென்ற நூற்றுண்டின் முடிவிலும் இந்த நூற்றுண்டின் முதலிலும் தொடங்கின அபத்தக் கதைகளை மேன்மேலும் தொடரச் செய்துகொண்டே போனுல் ஸமரஸம் எப்படி விளையும்? இதைப்பற்றிப் பெரியோர்களெல்லாம் ஆலோசிப்பது" என்று.

"ந்ரு" பத்திராதிபரை நோக்கி விஞ்ஞாபிக்கிறேன். செந்தாமரைக்கண்ணனய்யங்காருடைய சிறுநூலுக்கு இது சிகரமும் சேகரமுமான வார்த்தை. உப்பிலியப்பன் ஸன்னிதியில் வாழும் விவேகி வித்வச்சிகாமணியான நவநீதம் ஸ்ரீராம தேசிகாசாரியருடைய பதிப்பான தேசிகப்ரபந்த உரையில் *D. R.* அய்யங்கார் தாம் சேர்த்த மிகத்தவறான தேசிக சரித்திரத்திலிருந்து தானே விவாதங்கள் இன்னமும் ஓயாமல் வளர்ந்து செல்லுகின்றன. அந்தச்சரித்திரம் தவறானது தானென்று அந்த உப்பிலியப்பன் ஸ்வாமி தாமே தமது ரஹஸ்யத்ரய ஸாரப் பதிப்பில் காட்டியிருப்பதை உலகமறியக்காட்டினார் செந்தாமரைக்கண்ணர். இப்படிப்பட்ட ப்ராமாணிக வாக்வின்யாஸங்களை நோக்கி வீணாக வயிறெரிந்து பழைய குப்பை இத்யாதிகளை நீர் எழுதியதற்கு அனுதாபம் காட்டுவது தவிர உய்யும் வகை வேறில்லை. *D. R.* தான் எழுதிய தேசிக சரித்திரம் தவறென்று முடிந்தபின்பும், அதை மேன்மேலும் தனிப்புத்தகமாக பறுபதிப்புகள் செய்து வருவது தான் மேன்மேலும் விவாதங்களை வளர்த்து வருவது.

செந்தாமரைக்கண்ணன் அய்யங்கார் தமது சிறுநூலை அச்சிடுவதற்கு முன்பு (கையெழுத்து காபியாக) நமக்கனுப்பியிருந்தால் சில ஆவாபோத்வாபங்கள் செய்திருப்போம். ஆனாலும் குறையில்லை. "ந்ரு" பத்திரிகையிலும், சுதர்சனபத்திரிகையிலும் ஸமரஸப் ரஸ்தாவம் ஏதோ வந்திருக்கும் போலும். அது கண்டே இந்த ஸமரஸ நூலை செந்தாமரைக் கண்ணர் வெளியிட்டாரென்று நினைக்கிறேன். அவருடைய நினைவு விபரீதமாகி மேலும் சர்ச்சைகள் வளருவதற்கு இடமேற்பட்டதே என்று மிக வருந்துகிறேன்.

இங்கே முக்கியமான சில விண்ணப்பங்கள் கேளீர். தேசிகன் அருளிச் செய்த ரஹஸ்யங்களில் முதன்மையானது ஸம்ப்ரதாய பரிசுத்தி என்பது. அதில் உபக்ரமத்திலேயே ஒரு வாக்யம் "ஸ்ரீபாஷ்யகாரருடைய சிஷ்ய ஸம்ப்ரதாயங்களில் ஒன்றிலும் அர்த்த விரோதமில்லை. வாக்யயோஜநாபேதமே யுள்ளது. தேச கால அவஸ்த்தா விசேஷங்களாலே வரும் அநுஷ்டானை வைஷம்யம் சாஸ்த்ராநுமதம்" என்றருளிச்செய்துள்ளார். இப்படி ஸாதித்துவிட்டு ரஹஸ்யத்ரயஸாராதிகளிலே சில ஆசார்யர்களுடைய அர்த்தங்களைக் கண்டிப்பதும் காணப்படுகின்றதே? திருக்குருகைப் பிரான் பிள்ளானுடைய "மதிராபிந்து மிச்ரமான" இத்யாதி ஸ்ரீ ஸூக்திக்குக் காரிகாரூபமான மறுப்பு ப்ரத்யக்ஷமாகக் காணுநின்றதே? இப்படி இன்னும் சில ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளுக்குக் கண்டனம்காண்பது அபலபிக்கமுடியுமா? "ஸ்ரீ பாஷ்யகாரருடைய சிஷ்ய ஸம்ப்ரதாயங்களில் ஒன்றிலும் அர்த்தபேதமில்லை" என்றதற்கு இதெல்லாம் சேருமா? என்று சிலர் கேட்பதுண்டு. இதைப்பற்றி நாம் பல கால் பரிசீலனை செய்து எழுதியிருப்பதை இங்கு ஸாரஸம்க்ஷேபமாகத் தெரிவிக்கிறோம். முன்னம் ஒரு சிறு த்ருஷ்டாந்தம் கேளீர். ஒரு பண்டிதர் மற்றொரு பண்டிதருடைய வாக்யங்களைக் கண்டிக்கவெண்ணி அவருடைய வாக்யங்களில் "இதி விரமாம:" "ராம: வநம் ப்ரதிஷ்டதே ஸ்ம" இத்யாதி ப்ரயோகங்களைக் கண்டு-"ரமு தாது ஆத்மநேபதியாயிருக்க விரமாம:" என்று ப்ரயோகித்தது தவறு "ஷ்டா" தாது பரஸ்மைபதியாயிருக்க ப்ரதிஷ்டதே என்று ஆத்மநேபதியாக ப்ரயோகித்தது தவறு" என்று எழுதி வைத்திட்டாராம். பிறகு சில பண்டிதர்களோடு பேசித் தெளிந்து "விரமாம: என்றெழுதினவர்க்கு வ்யாங்பரிப்யோரம: என்கிற ஸூத்ரத்திலே தாத்பர்யமாக வேணும்; 'ப்ரதிஷ்டதே' என்று ப்ரயோகித்தவர்க்கு 'ஸமவப்ரவிப்யஸ்ஸ்த்த: என்கிற ஸூத்ரத்திலே தாத்பர்யமாக வேணும்" என்று எழுதி வைத்தார். பிறகு தாமும் அப்படியே ப்ரயோகங்கள் செய்யத் தொடங்கினாராம். இப்படிச் சில கதைகளுண்டு இவை அஸம்பாவிதங்களல்ல. இதே ரீதியில் சில அர்த்தங்களை

முதலிலே கண்டிப்பது வேறொரிடத்திலே அவ்வர்த்தங்களை உதாஹரித்து ''இப்படிச் சொன்னவர்களுக்கு இதிலே தாத்பர்யம்'' என்று நிர்வாகங்காட்டுவது; மற்றோரிடத்தில் அவ்வர்த்தங்களையே ஸ்வாபாவிகார்த்தங்களாக எழுதிப்போருவது என்று இத்தகைய வைகரிகளைக் கண்டுவருகிறோம். யாவரும் காணலாம். இதனால் என்ன தேறுகிறதென்னில் ஓரிடத்தில் செய்த கண்டனம் கண்டனமாகவே முடிந்துவிட்டது என்பதில்லை இதை இன்றாக நாம் விவரிக்க வேண்டியதில்லை. பலகால் பலவாறு விவரித்தேயிருக்கிறோம். மீண்டும் விவரித்துக்காட்டவேணுமென்று விரும்பினால் விரிவுக்கஞ்சாமல் விவரித்துக் காட்டுவோம் (அதாவது) ஒரு அர்த்தத்தை முதலில் கண்டிப்பது. பிறகு அந்த அர்த்தத்திற்கே தாத்பர்யம் வருணிப்பது, பிறகு அதையே தாம் தழுவிப்போருவது. ப்ராமாணிகர்கள் கோபதாபங்கொள்ளாமல் ஸமன்வயப்படுத்தவேண்டிய விஷயமிது.

## கண்ணபிரான் திருவவதாரமும் கம்ஸனது தீச்செயலும்

''மக்களறுவரைக் கல்லிடை மோத இழந்தவள் தன் வயிற்றில் சிக்கனவந்து பிறந்து நின்றாய்'' என்று பெரியாழ்வாரும் ''தந்தை காலில் பெருவிலங்கு தாளவிழ நள்ளிருட் கண் வந்த வெந்தை பெருமானார்'' என்று திருமங்கையாழ்வாரும் அருளிச்செய்தபடியே ''வளவெழுந்த வளமாட மதுரை மாநகரந் தன்னுள்'' திருவவதரித்த கண்ணபிரான் அந்த க்ஷணந்தன்னிலேயே திருவாய்ப்பாடிக்கு எழுந்தருளின செய்தியை கேள்வியுற்ற தீய புந்திக் கஞ்சன் பின்னை என்ன செய்தானென்பதை யாதவாப்யுதய காவியத்தில் கூறுகின்ற ஆசிரியர் இரண்டு ச்லோகங்கள் பணித்துள்ளார். அவற்றுள் முதல் ச்லோகம் வருமாறு:—

''மனீஷிதம் கைதவமாநுஷஸ்ய ச்ருத்வா பயக்ரோதபரிப்லுதாத்மா,
கம்ஸ: சிரம் ப்ராக்பவகாலநேமி: சிந்தார்ணவே மக்ன இவாவதஸ்த்தே'' என்று.

(இதன் கருத்தாவது) ஸ்ரீ கிருஷ்ண பகவானது செய்தியைக் கேட்டறிந்த கஞ்சன் நாம் வைத்திருந்த கட்டும் காவலும் பழுதாயிற்றே என்று சீற்றமும். இனி என்ன விளையுமோ என்கிற அச்சமும் கொண்டு இன்னது செய்வதென்று தேறாமல் முசித்துக்கிடந்தானென்கை.

இனி அடுத்த ச்லோகமாவது:—

''ஸ துர்தமான் ஆஸுரஸத்த்வபேதாந் நேதா ஸமாஹூய ந்ருசம்ஸசேதா:,
ப்ரஸ்த்தாபயாமாஸ பரைரத்ருஷ்யம் நந்தாஸ்பதம் காதவிஹாரகுப்தம்'' என்பது.

இதன் கருத்தாவது— அப்படி முசித்துக்கிடந்த கம்சன் ஒருவாறு உள்ளம் தேறி அஸுரப்பூண்டுகள் பலவற்றை விளித்து கண்ணன் இருக்குமிடத்தே சென்று அவனுக்கு தீங்கு செய்யுங்கள் என்று கூறி பயணப்படுத்தினனென்கை.

இந்த ச்லோகத்தில் கஞ்சனால் பயணப்படுத்தப்பட்ட அஸுரப் பூண்டுகளுக்கு (துர்தமான்) என்று விசேஷணமிடப்பட்டுள்ளது

ஒருவராலும் அடர்க்க முடியாதவை என்பது அதன் பொருள் கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் ''கம்ஸமுக்க்ய ந்ருப கீட'' என்றும், ஸுந்தரபாஹுஸ்தவத்தில் ''கம்ஸமுககீட'' என்றும் அருளிச் செய்கிறார். தலைவனான கஞ்சனையே புழு என்ற போது

அவனுல் அனுப்பப்பட்ட பூண்டுகளை புழுக்களினும் கடைகெட்டனவாகச் சொல்ல வேண்டும். அப்படியிருக்க துர்தமான் என்று விசேஷணமிட்டது ஏன்? என்று சிலர் சங்கிப்பதுண்டு. கேண்மின். இந்த ச்லோகத்தின் உத்தரார்த்தத்தில் திரு வாய்ப்பாடிக்கு இரண்டு விசேஷணங்கள் இட்டுள்ளார். (பரை: அத்ருஷ்யம்) என் றும் (நாதவிஹாரகுப்தம்) என்றுமுள்ள இரண்டு விசேஷணங்கள் குறிக்கொள்ளத் தக்கவை. கஞ்சனுல் ஏவப்பட்ட அஸுரர்கள் உண்மையில் பிரசண்டர்கள்தான். பிரசண்டர்களாயிருந்து என்ன செய்வது? கண்ணபிரான் எழுந்தருளியிருக்கு மிடத்தை நோக்குங்கால் அவை புழுக்களென்றே சொல்லத்தக்கவையாயின. இந்த ச்லோகத்தில் அவர்களைச் சொல்லும்போது விசேஷணங்களை இரட்டித்தும் அருளிச் செய்தது சிறந்த கவி சாதுர்யமாகும். கஞ்சன் சில சப்பைகளையோ, திப்பிகளையோ அனுப்பினுனென்று சொன்னுல் இது ஏற்றமாகாது. ப்ரேதங்களைப் பிணமாக்கின கதையாகும். ''பொல்லாவரக்கனைக் கிள்ளிக் களைந்தானை'' என்றுப்போலே சொல்லு வது எம்பெருமானுடைய பெருமைக்குச் சேர்ந்ததாகும். இந்த விஷயத்தை இப் போது நாம் இங்கு எழுதியது எதற்காகவென்னில் நம்மோடு விவாதப்படுவதற்குக் கிளம்புமவர்கள் இந்த ச்லோகத்தில் பூர்வார்த்தத்தில் சொல்லுகிறபடியே யிருக் கட்டும். உத்தரார்த்தத்தில் சொன்னபடியேயுள்ள நம்மிடத்தில் அது என்ன வாகும் என்று காட்டுவதற்கேயென்க.

## ந்ருஸிம்ஹப்ரியாவைப்பற்றி

இப்பத்ரிகை தோன்றி முப்பத்தோராண்டுகள் முடிந்து முப்பத்திரண்டா வது ஆண்டு நடைபெற்று வருவதாக அறிகிறோம். இது தோன்றுவதற்கு முன்பு வேதாந்த தீபிகை என்னும் பெயரால் ஒரு பத்ரிகை நடந்து வந்தது. அதுவும் அஹோபிலமடத்துப் பத்ரிகையாக நடந்துவந்ததாய் ஞாபகம். என்னுடைய இருபத் திரண்டாவது வயதிலிருந்து அதன் அனுபவமெனக்குண்டு. திருவள்ளூரில் வாழ்ந்த திவான்பகதூர். T. T. ரங்காச்சாரியார் என்கிற மஹான் சில வருஷங்கள் அதற்கு ஆசிரியராகவிருந்தார். பிறகு ஸ்ரீமான் உ.வே.S. கோபாலஸ்வாமி ஐயங்கார் என்கிற அட்வகேட் ஆசிரியராக இருந்தார். இந்த ஸ்வாமி ஸ்ரீமதுபயவே. ஸர் S.வரதாச்சாரியர் ஸ்வாமியின் ஸாக்ஷாத் மாதுலர். தென்னுசார்ய ஸம்ப்ரதாயஸ்தர். அவர்க்குப் பிறகு ஸ்ரீமதுபயவே V. V. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமிகள் ஆசிரியராக விருந்தார். அக்காலத்தில் அந்த ஸ்வாமி "வாதவிவாதப் பகுதி'' என்று ஒரு விபாகம் ஏற்படுத்தி அந்த வேதாந்த தீபிகா பத்ரிகையில் மாதந்தோறும் சில கட்டுரைகள் வெளிவரும் படி செய்துவந்தார். உபய வேதாந்தங்களிலும் ஒருவரைக்கொண்டு பூர்வபக்ஷ வியாஸம் எழுதுவிப்பது, மற்றொருவரைக் கொண்டு அதற்கு ஸமாதான வ்யாஸம் எழுதுவிப்பது என்கிற முறையில் நடத்திவந்தார். அப்போது அந்த ஸ்வாமி தாமாகவே ''இந்த வகுப்பு வ்யாஸங்களில் தேவரீரும் பங்குகொள்ளவேணும்'' என்று எனக்குத் தெரிவித்திருந்ததனுல் அதில் நானும் பங்குகொள்ளத் தொடங்கி னேன். அதிலிருந்து சிலர்க்கு மனோவிகாரம் ஏற்பட்டது. அந்த விவாதப் பகுதியே வேண்டாமென்று நிறுத்தப்பட்டது. இதெல்லாம் 1930-ஆம் ஆண்டுக்கு முந்திய

கதை. 1931-ஆம் வருஷத்தில் நான் சென்னையில் தொண்டைமண்டலம் ஹை ஸ்கூலில் சனி, ஞாயிறுதோறும் உபந்யாஸங்கள் தொடங்க நேர்ந்தது. அப்போது சில மாதங்களுக்குப் பிறகு ஸ்ரீ S. வரதாச்சாரியர் ஸ்வாமி, மஹரிஷி வாஸுதேவாச்சாரிய ஸ்வாமி, தாக்ஷிண்த்ய கலாநிதி மஹாமஹோபாத்யாய ஸாமிநாதய்யர் அவர்கள் போல்வாரான மஹனீயர்கள் அவ்வுபந்யாஸ கோஷ்டியை அலங்கரித்து வந்தார்கள். அது ஒரு நல்லடிக்காலமென்னவேணும். அப்போது சனிக்கிழமை மாலைகளில் ஸ்ரீ ராமாயண உபந்யாஸங்களும் ஞாயிற்றுக்கிழமைதோறும் காலைவேளைகளில் பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளில் உபந்யாஸங்களும் நடைபெற்று வந்தன. மேலே குறித்த மஹநீயர்கள் உற்சாகத்தோடு தவறாமல் எழுந்தருளிக் கொண்டிருந்தார்கள். மஹரிஷி வாசுதேவாச்சாரிய ஸ்வாமி அப்போது வேதாந்த தீபிகைக்கு ஆசிரியராகவிருந்தார். நம்முடைய உபந்யாஸங்களில் அடிக்கடி தேசிக திவ்யஸூக்திகளின் ப்ரஸங்கமே நேரும். அப்போது அதிகரணஸாராவளியிலிருந்து இரண்டு மூன்று ச்லோகங்களாவது ஞாயிற்றுக்கிழமை உபந்யாஸங்களில் நியமேந ப்ரஸங்கிக்கப்பட்டுவரும். அதைக்கேட்டுவந்த ஸ்ரீ வரதாச்சாரியஸ்வாமியும், மஹரிஷி வாஸுதேவாச்சாரிய ஸ்வாமியும் "தேவரீர் அதிகரண ஸாராவளிக்கு விரிவான மணிப்ரவாள வ்யாக்கியான மொன்று எழுதவேணும். அதை வேதாந்த தீபிகையில் தொடர்ந்து ப்ரசுரிக்கச் செய்கிறோம்" என்று அடிக்கடி ஸாதிக்க அப்போது அந்த வ்யாக்யானம் எழுதத் தொடங்கினேன். வேதாந்த தீபிகைக்கு அனுப்பினேன். ப்ரசுரிக்கவுமாரம்பமாயிற்று. ஒரு பத்ரிகையில் அவதாரிகையும் மற்றொரு பத்ரிகையில் முதல் ச்லோக வ்யாக்யானமும் வெளிவந்தது. அப்போது பல வடகலை ஸ்வாமிகள் "இந்த வ்யாக்யானத்தை இப்பத்ரிகையில் அச்சிடக் கூடாது" என்று ஏதோ சில காரணங்களுடன் தெரிவித்தார்களாம். அதனால் அது நின்றுவிட்டது. பிறகு சிலவாண்டுகள் கழித்து ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையாரம்பமாயிற்று. அதற்கு மஹரிஷி வாஸுதேவாச்சாரிய ஸ்வாமியே ஆசிரியராக அமைந்தார். அப்போது அந்த ஸ்வாமி நம்முடைய உபந்யாஸ கோஷ்டிகளில் அன்வயித்துக் கொண்டிருந்ததனால் அடிக்கடி நம்முடைய நூல்களுக்கு மதிப்புரை எழுதுவதும் நம்மைப்பற்றி ப்ரசம்ஸித்து எழுதுவதுமாயிருந்தார். அப்போதும் பல வடகலை ஸ்வாமிகள் அதை மிகமிக ஆக்ஷேபித்து "ந்ருஸிம்ஹப்ரியாவில் அண்ணங்கராசாரியருடைய வ்யாஸமாவது அவரைப்பற்றின ப்ரசம்ஸையாவது ஈஷத்தும் வெளிவரக் கூடாது" என்று தெரிவித்தார்களாம். அப்போது ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி இஞ்சிமேட்டழகிய சிங்கர் ஆஸ்தானமலங்கரித்திருந்த காலம். வாஸுதேவாசாரியர் அந்த ஸ்வாமி ஸன்னிதியில் விடைகொண்டு தமக்கு வந்திருந்த அக்கப்போர் கடிதங்களைக் காண்பித்து, "இப்படிப் பலர் வருந்தி எழுதிவருகிறார்கள். நான் பிரார்த்தித்தே காஞ்சீபுரம் ஸ்வாமி வியாஸங்கள் அனுப்பி வருகிறார். அதை வெளியிடக்கூடாதென்று ப்ரபல ஆக்ஷேபங்கள் தோன்றியுள்ளன. ஸ்வாமி நியமநம் எப்படி?" என்று கேட்டாராம். அதற்கு ஸ்வாமி, "அண்ணங்கராசாரியர் தாம் எழுதும் வ்யாஸங்களில் தேசிக ஸ்ரீ ஸூக்திகளைப் பெரும்பாலும் புகுத்தியே எழுதுவர், பொடிவைத்தும் எழுதுவர். பலபேர்களுக்கு அநபிமதமென்று தெரிவிப்பதால் அவர் வியாஸங்களை உபேக்ஷித்திருக்கலாமே" என்று ஸாதித்தாராம். அப்பொழுது நமக்கு ந்ருஸிம்ஹப்ரியாவுடன் தொடர்பு அற்றது. நமக்கு

இப்பத்ரிகை அனுப்புவதும் வேண்டாவென்று நிறுத்தப்பட்டது. பிறகு சில வாண்டுகள் கழித்து ந்ருஸிம்ஹப்ரியா வில் விஷமவ்யாஸங்கள் பல வெளிவர அப்போது நாம் உதாஸித்திருக்க முடியாமல் பல கட்டுரைகள் அம்ருதலஹரியிலும் தனிப்புத்தகமாகவும் எழுதி வெளியிட்டோம். அக்காலம் இப்போது ஸ்மரிக்கத் தக்கதன்று, எப்போதும் ஸ்மரிக்கத்தக்கதன்று. வர்த்தமான அழகிய சிங்கருடைய பரமக்ருபா ப்ரவாஹத்தில் மூழ்கியிருக்கிறோம். பல வருஷங்களாகவே ந்ருஸிம்ஹப்ரியா நமக்கு வருவதுமில்லை, பார்ப்பதுமில்லை. இனியும் அப்படியே இருப்போம. மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமியின் ப்ரஸ்தாவம் இங்கு ப்ராப்தமானபடியால் நித்யஸ்மரணீயரும் பரமப்ராமாணிகருமான அந்த ஸ்வாமியின் பழைய வ்யாஸமொன்றை இங்கு வெளியிட்டு நிற்கிறோம்.

## வேதாந்ததீபிகா பத்திரிகையின் கட்டுரை

"பிரதிவாதி பயங்கரம் அண்ணனுடைய ஸந்ததியில் தோன்றினவரும், அந்தத் திருவம்சத்திற்கு ஏற்ற ஞானஅநுட்டானங்கள் நிரம்பப்பெற்றவரும், காஞ்சி நகரத்தில் எழுந்தருளி யிருப்பவரும் நாடெங்கும் பரவிய நற்புகழ் பெற்றவருமான ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமியைப் பற்றித் தெரிந்து கொள்ளாதவர்களும், அவருடைய கல்வித்திறத்திலும் உபந்யாஸ சைலியிலும் க்ரந்தலேகந வைகரியிலும் ஈடுபடாதவர்களும் பெரும்பாலும் இருக்கமாட்டார்களென் றெண்ணுகிறேன். இந்த ஸ்வாமி ஸம்ஸ்க்ருத பாஷையிலும் தமிழ்ப் பாஷையிலும் இயற்றி வெளியிட்டிருக்கின்றவும் நாளைக்கும் வெளியிட்டுக்கொண்டிருக்கின்றவுமான பற்பல அரும் பெரும் நூல்களினால் இவருடைய உபய பாஷா ப்ராவீண்யம் ஒப்பற்றதென்பது உலகமறிந்த தாகும். ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளிலும் ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளிலும் அநேக பாகங்களுக்கு இந்த ஸ்வாமியின் அருமையான வியாக்கியானங்கள் வெளிவந்து பண்டிதர்கள் பாமரர்களென்கிற வாசியில்லாமல் எல்லோருக்கும் மிகப் பயன்பட்டுக் கொண்டிருப்பது பற்றி நாம் அதிகமாகச் சொல்லத்தேவையில்லை. தவிரவும் ஸ்ரீகாஞ்சியில் 'வேதவேதாந்த வைஜயந்தி' என்கிற ஸம்ஸ்க்ருத பாடசாலையை ஸ்தாபித்து அதன் மூலமாகப் பல ஸ்ரீவைஷ்ணவ வித்யார்த்திகளுக்கு உபயவேத வேதாந்த ப்ரவசந கைங்கரியத்தை ஆச்சரியமாக இந்தஸ்வாமி நடத்தி வருகின்ற விசேஷமும் ப்ரஸித்தமானதே. இப்படிப்பட்ட அதிசயங்களெல்லாவற்றுக்கும் மேலாக இந்த ஸ்வாமி மூன்று வருஷகாலமாய் சென்னை மாநகரில் பிரதி சனிக்கிழமை மாலை, ஞாயிற்றுக் கிழமை காலைகளில் அருளிச்செய்து கொண்டு வருகிற அமுதமொழி மயமான உபன்யாஸங்களின் சிறப்பு விலக்ஷணமானது. இவ்விஷயத்தைப்பற்றி இங்குக் கொஞ்சம் விவரமாக எழுத விரும்புகின்றேன். சென்னைப்பட்டணத்தில் வித்வான்களுடைய உபந்யாஸங்களை அடிக்கடி நடத்திவைக்க அநேக ஸபைகளும் சாரிடிகளும் ஏற்பட்டிருக்கின்றன. அப்படிப்பட்ட ஸபைகளுள் "பகவந்கதா பிரசங்கசபா" என்பது ஒன்று. மற்ற எல்லா ஸபைகளைவிட இந்த ஸபையே முதன் முதலாக ஏற்பட்டதென்றும் இது சிறந்த பிரமுகர்களால் ஸ்தாபிக்கப் பட்டதென்றும் தெரியவருகிறது. இந்த ஸபையில் அநேக வித்வான்களுடைய ஹரிகதா காலக்ஷேபங்களும், ஸங்கீதக் கச்சேரிகளும் உபன்யாஸங்களும் விசேஷமாக நடந்திருக்கின்றன. ப்ரஸித்தர்களாயிருந்த ப்ரம்மஸ்ரீ பஞ்சாபகேச சாஸ்த்ரியாரவர்கள், பருத்தியூர் கிருஷ்ணசாஸ்த்ரியாரவர்கள், பண்டிட் லக்ஷ்மணாசாரவர்கள் முதலான மஹான்கள் இந்த ஸபையில் காலக்ஷேபங்கள் நடத்தியிருக்கின்றார்கள். தங்கசாலை வீதியிலுள்ள தொண்டைமண்டலம் ஹைஸ்கூல் ஹாலில் இந்த ஸபையின் காரியங்கள் நடந்து வருகின்றன. அந்த ஹால் ஆயிரக்கணக்கான ஜனங்கள் வீற்றிருக்கக்கூடிய மிக விசாலம் அமைந்தது.

1931 ஆம் வருஷம் ஜூலை மாதத்தில் ஸ்ரீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமி இந்த ஸபையில் உபந்யாஸங்கள் செய்தருள வரவழைக்கப்பட்டார். உடையவர் வைபவம், பாகவதர்களின் வைபவம், தேவப்பெருமாள் வைபவம் போன்ற தனித்தனி விஷயங்களில் பத்தெட்டு உபந்யாஸங்கள் நடந்த பின்பு ஸ்ரீமத் ராமாயண உபன்யாஸங்களை விரிவாகக் கேட்க விரும்பின அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி 1931 ஆகஸ்டு மாஸத்தில் ஸ்வாமி ஸ்ரீமத் ராமாயண உபந்யாஸம் நடத்த ஆரம்பித்தார். புஸ்தகம் வைத்துக் கொள்ளாமலும், கைக் குறிப்புகளுமில்லாமலும் கங்கா ப்ரவாஹம்போல் ஸ்வாமி ஸாதித்துவரும் உபன்யாஸங்களைக்கேட்டு அதிசயப்படாதவர்கள் யாருமில்லை. வால்மீகி ராமாயணம், கம்ப ராமாயணம், பிள்ளைப்பெருமாளையங்கார் பாடல்கள், திருக்கோவையார் முதலான தமிழ்க்கிள்வி நூல்கள், காவ்ய நாடக அலங்கார ச்லோகங்கள், ஸகல ஆசார்ய ஸ்ரீஸூக்திகள், ச்ருதி இதிஹாஸ புராணங்கள் ஆகிய இவ்வளவையும் இணையாகப் பொழிந்துகொண்டு ஸ்வாமி நிகழ்த்தும் உபந்யாஸங்கள் மிகவும் அருமையானவை. இப்படிப்பட்ட அமைப்புடன் ஸ்ரீராமாயண விசேஷார்த்த உபந்யாஸம் இதுவரை எங்கும் கேட்டதில்லை யென்றே பலரும் அபிப்ராயப்படுகிறார்கள். புருஷர்களும் ஸ்த்ரீகளுமாய் சுமார் ஆயிரம் ஜனங்கள் கேட்டுக் களித்து வருகிறார்கள். ஆங்கிலத்தில் B.A., M.A. முதலான பட்டப் பரீக்ஷைகள் தேறினவர்களும் தமிழ்ப்பண்டிதர்களும் வடமொழிப் புலவர்களும் பலவகை உத்யோகஸ்தர்களும் வியாபாரிகளும் அநேக மத ஸம்ப்ரதாயஸ்தர்களும் திரண்டு மிக்க குதூஹலங்கொண்டு கேட்டுக் களிக்கும்படியாக நடத்தப்பட்டு வருகின்ற இவ்வுபந்யாஸத்தில் இப்போது (1934 ஆடு மே மீ) விபீஷணசரணாகதி நடந்து வருகின்றது. இந்த சரணாகதி விஷயத்தில் மாத்திரம் இதுவரை பன்னிரண்டு உபந்யாஸங்கள் நடந்திருக்கின்றன. சென்ற மாத முடிவில் ஸ்ரீமத் வேதாந்த தேசிகனுடைய ஹம்ஸ ஸந்தேசகாவியத்தின் ஸாரப்பொருள் இரண்டு உபந்யாஸங்களில் வெகு ரமணீயமாக எடுத்துரைக்கப்பட்டது. அப்போது முக்கியமாகக் கையாளப்பட்ட சுலோகங்கள் தெலுங்கு லிபியில் தனிப்பதிப்பாக வெளிபிடப்பட்டுமுள்ளது. சனிக்கிழமைகளில் மாலை 6 மணி முதல் 8 மணிவரையிலும் ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 8 மணிமுதல் 10 மணிவரையிலும் இவ்வுபன்யாஸங்கள் நடந்து வருகின்றன. ஒவ்வொரு மாதத்திலும் ஒவ்வொரு வாரம் விடுமுறையாகும். கீழ் நடந்த மூன்று வருஷங்களிலும் மார்கழி மாதத்தில் முப்பது நாளும் திருப்பாவை விசேஷார்த்த ஸ்வாபதேசார்த்த அந்யாபதேசார்த்த உபன்யாஸங்கள் வெகு அருமையாக ஸ்வாமியால் நடத்தப்பட்டன. உபய பாஷையிலும் ஸகல க்ரந்தங்களிலும் உபயவேதாந்தங்களிலும் மிகவும் பாராட்டத் தகுந்த வல்லமைபெற்று ஆங்காங்குப் பொருத்தமான மேற்கோள்களை விளக்கி, சிறியவர்களுக்கும் நெஞ்சில் நன்கு பதியுமாறு எளிதாகவும், அழகாகவும், கம்பீரமாகவும் அமுத மொழிகளை அளித்து வருகின்ற அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் இப்படியே பல்லாண்டு பல்லாண்டாக எழுந்தருளியிருந்து உலகினரை உய்விக்க வேண்டுமென்று எம்பெருமானைப் பிரார்த்திக்கின்றேன்''. இது ஏற்கனவே இருமுறை வெளியிட்ட பழைய வ்யாஸம். இப்படிப்பட்ட உதாரமநஸ்கர்களான பத்ராதிபர்கள் இப்போது துர்லபர்கள்.

---

ஸ்ரீ:

# ஐதிஹ்யார்த்த விவரண விளக்கு

(மதுராந்தக வித்வானின் ஐதிஹ்யரத்நாவளியில் கண்ட அபத்தங்களுக்கு மறுப்பு)

(ச்லோ) ஐதிஹ்யார்த்தவிவ்ருத்யாம் மதுராந்தக ஸூரிரநதிகார்யபி ஸந்,
ப்ராவர்த்ததேதி யதிதம் பராபவாயைவ கேவலம் ஸ்வஸ்ய.

(வெண்பா.) கதிரா யிரமிரவி காய்ந்தாற்போல் காய்ந்து, மதுராந் தகரின் மருளைச் — சதிராகக்
கச்சிநக ரண்ணங்க ராசிரியன் காசினியோர் மெச்சிடவே வேரறுப்பான் மேல்.

இப்போது நாம் அலசியலசி யெறிந்த ந்ருஸிம்ஹ ப்ரியாவில் ஸ்ரீ மதுராந்தக ஸஹ்ருதய ஸூஹ்ருந்மணிஸ்வாமி "ஐதிஹ்யரத்நாவலீ" என மகுடமிட்டு தமக்கு க்ஷுண்ணமான நடையில் ஏதோ எழுதி வருகின்றார். திவ்யப்ரபந்த வியாக்கியானங்களில் ப்ராஸங்கிகமாகவும் ப்ரஸக்தாநுப்ரஸக்தமாகவும் சிலபல ஐதிஹ்யங்களும், பூர்வாசார்ய ஸம்வாதங்களும் பெரிய வாச்சான்பிள்ளை முதலிய ஆசாரியர்களால் அருளிச் செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் விவரணஸாபேக்ஷங்களாயுள்ளவற்றுக்கு நாம் நம்முடைய திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகையில் பெரும்பாலும் விளக்கம் காட்டியுள்ளோம். நாம் பலவாண்டுகட்கு முன் பதிப்பித்துள்ள ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலையிலும் பல விவரணங்கள் காணலாம்.

அருளிச்செயல் வியாக்கியானங்களையும் ரஹஸ்ய வியாக்கியானங்களையும் குருமுகமாகப் பலகால் கேட்டவர்களுக்கே நிலமான இச்செயலில் குருகுல விமுகர்கள் கைவைப்பது ஸாஹஸம்.

ப்ரக்ருத ந்ருஸிம்ஹப்ரியா ஸஞ்சிகையில் வெளிவந்த ஐதிஹ்ய ரத்நாவளிப் பகுதியில் ஓங்கியுலகளந்த பாசுரத்தின் ஆறாயிரப்படி வியாக்கியானத்திலுள்ள ஓரைதிஹ்யம் உதாஹரிக்கப்பட்டு விரஸமாக விவரிக்கப்பட்டுள்ளது. இவ்விடத்துள்ள ஐதிஹ்யம் திருவாய்மொழி ஈட்டிலும் (4-10-2 ல்) சிறிது சப்தபேதத்தோடுள்ளது. அங்கு நமது திவ்யார்த்த தீபிகையுரை பங்க்திகளை, இதோ உதாஹரிக்கிறோம்.

## 4-10-2 திவ்யார்த்த தீபிகை உரை வாக்கியங்கள்

அவன் மேவியுறை கோயில் என்றவிடத்து நம்பிள்ளையீடு:— "அவன் பரமபதத்தில் உள்வெதுப்போடே போலே காணுமிருப்பது, ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை அநுஸந்தித்து 'இவை என்படுகிறனவோ' என்று திருவுள்ளத்தில் வெதுப்போடே யாயிற்று அங்கிருப்பது... 'பரமபதத்திலும் ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை யநுஸந்தித்துத் திருவுள்ளத்தில் வெதுப்போடேயாயிற்று எழுந்தருளியிருப்பது' என்று பட்டர் அருளிச்செய்ய, ஆச்சானும் பிள்ளையாழ்வானும் இதைக் கேட்டு 'பரமபதத்திலே ஆநந்த நிர்ப்பரனாயிருக்கிற விருப்பிலே திருவுள்ளத்திலே ஒருவ்யஸநத்தோடே யிருந்தானென்கை உசிதமோ? என்றார்கள் என்று பண்டிதரென்கிறவர் வந்து விண்ணப்பஞ் செய்ய, *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித:* என்றது குணப்ரகரணத்திலேயோ தோஷப்ரகரணத்திலேயோவென்று கேட்க மாட்டிற்றிலீரோ? இது குணமாகில் குணமென்று பேர் பெற்றவற்றில் அங்கில்லாத தொன்றுண்டோ? என்றருளிச் செய்தார்."

## (இதற்கு மேல் நமது விவரணம்)

இந்த ஐதிஹ்யம் இங்கு அருளிச்செய்ய ப்ரஸக்தி ஏதென்னில்; மூலத்தில் "அவன் மேவியுறை கோயில்" என்றுள்ளது; மேவியுறைதலாவது ஆசையோடு வாழ்தல்; பரமபதத்தில் பட்ட துக்கம் இங்குத் தீரப்பெறுவோமென்று ஆசைப்பட்டு வாழ்தலென்றே பொருள் சொல்ல வேண்டியிருத்தலால், பரமபதத்திலும் பெருமானுக்கு து:க்கப்ரஸக்தியுண்டோவென்று சங்கை யுண்டாகுமாதலால் அதைப் பரிஹரிக்க ஐதிஹ்யமருளிச் செய்தபடி. எம்பெருமானை ஸமஸ்த கல்யாண குணாத்மகன் என்றும் *உயர்வறவுயர் நலமுடையவன் என்றும் கூறுகின்றவர்கள், "ஒன்றொழியாமே ஸகல குணங்களும் அப்பெருமானிடத்தேயிருக்கின்றன" என்று இசைந்தே தீரவேண்டும். ஒரு குணம் இல்லை செய்யப்பட்டாலும்* ஸமஸ்த கல்யாண குணாம்ருதோததி:* என்று சொல்வதற்குக் குறை நேர்ந்ததாகும். துக்கப்படுவதென்பது கல்யாணகுணமன்றே, அது ஹேயகுணமாயிற்றே என்று சிலர் கலங்குவர்கள். ஸ்வார்த்தமான சோகம் ஹேயமே யல்லது பரார்த்தமான சோகம் ஹேயமேயன்று; அதுதான் சிறந்த குணமெனப்படும். ஆனதுபற்றியே இராமபிரானுடைய சுப குணங்களை யெடுத்துரைக்கின்ற அயோத்யாவாஸி ஜனங்கள் * வ்யஸநேஷு மநுஷ்யாணும் ப்ருசம் பவதி து:க்கித:* என்றார்கள். எம்பெருமானாரும் ஸ்ரீபாஷ்யத்தில் *தயா ஹி நாம ஸ்வார்த்த நிரபேக்ஷா பரது:க்காஸஹிஷ்ணுதா* என்றருளிச் செய்தார். ஸஹஸ்ரநாமத்திலே விகர்த்தா என்னும் திருநாமத்தின் பாஷ்யத்திலே "தமக்காக இன்பதுன்பங்கள் இல்லாமலிருந்தும் பிறர் இன்பதுன்பங்களை அநுபவிப்பதனால் தாம் இன்பதுன்பங்களையடைந்து விகாரப்படுகிறவர்; இந்த விகாரம் பிறரிடத்திலுள்ள அன்பு பற்றியதாதலால் ஈச்வரனுக்குக்குற்றமாகாது." என்று பட்டர் ஸ்பஷ்டமாகவே அருளிச்செய்தார். எம்பெருமான் அனுபவிக்கிறதாகச் சொல்லப்படுகின்ற துக்கம் மெய்யானதா, பொய்யானதா, என்கிற விசாரமே அவசியமற்றது. எம்பெருமானென்று ஒருவனுளனென்றும் அவன்றான் ஸமஸ்த கல்யாண குண நிதியென்றும் இசைகின்றவர்கள் அப்பெருமானைப் பரது:க்கது:க்கியாக இசைந்தே தீரவேணும். இக்குணம் அவனுக்குப் பொருந்தாது என்பவர்கள் நிர்க்குணப்ரஹ்மவாதிகளேயாவர்.

(ஆக இவ்வளவும் நமது திருவாய்மொழி தீபிகையிலுள்ள பங்க்திகள். இந்த ஸங்க்ஷேப உரையில் திருப்தி பெறாதவர்கட்கு இதோ விரிவாக உணர்த்துகிறோம்.)

# ஈச்வராவதார சோக விமர்சனம்

[ராமாவதாரம் முதலிய விபவாவதாரங்களில் எம்பெருமான் அன்பர்களின் துக்கத்தைக் கண்டு தானும் துக்கப்பட்டதாகச் சொல்லியிருக்கும் பிரகரணங்களின் உண்மைப் பொருளை விசதமாக வெளியிடுகிறோம்.]

எம்பெருமானை தயாளுவென்று துதிக்கிறோம். தயையாவது பிறர் படும் துக்கத்தைக் கண்டு தானும் துக்கப்படுகை என்று பூர்வாசாரியர்களின் கொள்கையாம். இப்படிச் சொல்லுவது யுக்தமன்றாகையாலே பிறர் படும் துக்கத்தைப் பரிஹரிக்க வேணுமென்கிற விருப்பமே தயையென்று சொல்லவேணுமென்று சில

வகுப்பினாின் கொள்கையாம். இவ்விஷயத்தில் உண்டாகக்கூடிய ஸந்தேஹங்களை நீக்கித் தெளிவு பெறுவிக்கிறோம். பிறர் படும் துக்கத்தைப் பரிஹரிக்க விரும்புந் தன்மை எம்பெருமானிடத்திலுள்ளது என்பதில் யார்க்கும் விவாதமில்லை. அல்லும் பகலும் அன்பர்களின் துயரங்களைத் தொலைப்பதென்றிலேயே தீக்ஷிதனுயுள்ள எம்பெருமானுக்குப் பரதுக்க நிராகரணேச்சை யுள்ளதென்பது ஆக்ஷேபிக்கத் தகுந்த விஷயமே யன்று. ஆனால் எம்பெருமானுக்கு அது ஒரு தனிப்பட்ட குணமே யல்லது தயை யென்னுஞ் சொல்லுக்கு அது அர்த்தமன்று என்பதை நன்குணரவேணும். ஆனால் தயையுள்ளவன் சக்தனுமாயிருந்தால் அவன் பரதுக்க நிராகரணத்தில் விருப்பமும் முயற்சியும் கொள்ளுகிறான். அவனே அசக்தனுயிருந்தானுகில் துக்க நிவாரணத்தில் முயற்சி கொள்ள ப்ரஸக்தி யில்லாமையாலே 'ஐயோ! இவனுக்கு இப்படி துக்கமுண்டாயிற்றே!' என்று தானும் துக்கிப்பதோடு நிற்கிறான். ப்ரக்ருதம் ஸர்வேச்வரனைப் பற்றி விசாரமாகையாலும் அவன் தான் அப்ரமேய சக்தி யுக்தனுகையாலும் அந்த சக்தியைக் கொண்டு பரதுக்க நிராகரணம் பண்ண ப்ராப்தமாயிருக்க, தானும் துக்கிக்கிறானென்று சொன்னால் இது பொருத்தமாகத் தோன்றவில்லையே, என்பது தான் பெரிய சங்கை.

இதற்குச் சிலர் லேசாக ஸமாதானம் சொல்லிவிடுவர்கள், எம்பெருமான் ஸர்வசக்தனே யாகிலும் அசக்தன் போல் பாவனை காட்டி வந்திருப்பதனால் துக்கிக்கக் குறையில்லை என்று. இதுவன்று இங்குச் சொல்லத் தக்கது. நம் ஆசார்யர்கள் தெரிவித்திருப்பதைச் சொல்லுகிறோம். ஸர்வசக்தனுக்குங் கூட நிராகரிக்கவொண்ணாத துக்கமுண்டு. துக்கம் இரண்டுவிதம்; கடந்துபோன துக்கமென்றும் இனிமேல் விளையப்போகிற துக்கமென்றும். வர்த்தமான துக்கத்தையும் சேர்த்து மூன்றாகக் கணக்கிடவுமாம். ஸர்வசக்தனான எம்பெருமான் அடியார்களின் வர்த்தமான, பவிஷ்யத் துக்கங்களைப் போக்க சக்தனானாலும் பூதகாலத்திய துக்கங்களுக்கு அநுதபிக்க வேண்டியது தவிர வேறு பரிஹாரம் செய்யமுடியாதன்றோ. சைதந்ய முள்ளவிடத்திலே இந்த அநுதாபம் இருந்தே தீரும். எம்பெருமான் கஜேந்திராழ்வானுடைய கூக்குரல் கேட்டுத் திருநாட்டிலிருந்து அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்த கதை யாவர்க்குந் தெரியுமன்றோ? இதுவும் ஒரு அவதாரமே. இது, தன்னுடைய சக்தியை மறைத்து வைத்திட்டு அசக்திபாவனையோடு செய்த அவதாரமன்றே! உள்ளதான சக்தியைக் கொண்டு கஜேந்திரனுடைய ஆர்த்தியை அடுத்த க்ஷணத்தில் பரிஹரிக்கக் காண்கிறோமே. ஆனாலும் அப்படி துக்க பரிஹாரம் செய்வதற்கு முந்திய க்ஷணம் வரையில் அப்பெருமான் அந்த கஜராஜனுக்காகப் பட்ட துக்கம் வாசாமகோசரம். அப்போது அப்பெருமானை நாம் நேரில் காணக் கொடுத்துவைக்கவில்லை; உட்கண்ணாலே காணப் பெற்ற ஸூக்ருதிகள் சொல்லியிருப்பதையே நாம் தெரிந்துகொள்ளுகிறோம். ஸ்ரக்பூஷாம்பர மயதாயதம் ததாநோ திங் மாமிதி அநுகஜகர்ஜமாஜகந்த'' என்கிறார் பட்டர். கஜேந்திரனது கூக்குரலைக் கேட்டுப்பதறிப் பயணமெடுத்து வரும்போது 'ஐயோ! கெட்டேன் கெட்டேன்! என் ஜன்ம மென்னுயிற்று!' என்று நொந்துகொண்டே வந்ததாக அருளிச் செய்துள்ளார். 'ஐயோ! பரம பக்தனை இப்படி யொரு நீர்ப் புழுவின் வாயிலே யகப்பட்டுத்துடிக்கவிட்டேனே பாவியேன்!' என்று எம்பெருமான் தான் கதறியழுகின்றமையன்றே (மாம் திக்) என்கிற விதில் நன்கு விளங்குவது. யானையினிடரைத்

தீர்க்க வல்லவனே யெம்பெருமான்; அடுத்த க்ஷணத்திலேயே அவ்விடரைத் தீர்ப்பதும் செய்கிறான். அதிலொரு குறையில்லை, ஆனாலும் இடர் நேர்ந்துவிட்டதே யென்று இடர்படாமலிருக்க முடியுமோ எம்பெருமானாலே? மரங்களுமிரங்கும் போது பரம சேதநன் இரங்காதிருக்க ஸாத்யமோ? சைதந்ய க்ருத்யமாக நேருமது தவிர்க்க வொண்ணாதே. குழந்தை கிணற்றில் விழுந்து விட்டதென்றறிந்த தாய் அழுதுகொண்டே ஓடிவருகிறாள்; தைவாதீனமாகக் குழந்தை எடுக்கப்பட்டு ஜீவிதஸந்தேஹமும் நீங்கப் பெற்றது. ஆனாலும். தாயினுடைய துயரம் அன்று முழுவதும் அநுவர்த்தித்தேயிருக்கும்; அழுகை ஓயாது. கண்ணீர்ப் பெருக்கு அறாது. காரணம் யாரைக் கேட்பது? யார் சொல்ல வல்லார்? ஆத்ம தர்மம் அகற்ற வொண்ணாதே! கஜேந்திராழ்வானுடைய துயர் தீர்ந்த பின்புங் கூட எம்பெருமானுடைய துயர் விரைவில் தீரவில்லையே, தீரமாட்டாதே.

இவ்விஷயம் சில பாக்ய ஹீநர்களுக்கு ருசிக்க மாட்டாதென்று நினைக்கிறோம். ஏதோ இதெல்லாம் அதிவாதமாகச் சொல்லப்படுகிறதென்றே கொள்வது சிலருக்கு ஜந்மஸித்தமாயிருக்கின்றது. கண்ணபிரான் அவதார ஸமாப்தியைச் செய்து தன்னுடைச்சோதிக்கு எழுந்தருளச் செய்தேயும் திருவுள்ளத்தில் இழவோடே எழுந்தருளினதாக மஹர்ஷி கூறுகிறார். ''நாதிஸ்வஸ்தமநா யயௌ'' என்கிற வசனம் ப்ரஸித்தமானது. த்ரௌபதிக்கு மஹா ஸதஸ்ஸில் நேர்ந்த பரிபவத்தைப் பரிஹரித்து துர்யோதனாதிகளையும் நிரஸித்து தர்மபுத்திரன் தலையிலே முடியையும் வைத்து இவள் குழலையும் முடிப்பித்துப் பின்னும் ''கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்; ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாத் நாபஸர்ப்பதி'' என்று குறைவாளனாய், பரமபதத்துக்கெழுந்தருளுகிற போதும் திருவுள்ளத்தில் புண்ணோடே யெழுந்தருளினான் என்று மஹரிஷிகள் தாமே கூறியிருக்க, கல் நெஞ்சும் கரையா நிற்க, இந்த மஹா குணத்தை உள்ளுருகி அநுபவிக்க ப்ராப்தமாயிருக்க, அதற்கு பாக்யமில்லாததோடு இக்குணத்தை இல்லை செய்யவும் தீக்ஷிதர்களாய் ஆக்ஷேபங்களை வளர்த்துவதுதான் ஆச்சரியம். பகவத் குணங்களில் நெஞ்சு உருகுபவர்க்கு ப்ரக்ருத விஷயத்தில் விப்ரதிபத்தி லேசமும் இராது. நாம் அநுபவிக்க வேண்டிய பகவத்குணங்களில் தயையும் வாத்ஸல்யமுமே தலைநிற்பவை. ''ஆவா வென்று அடியேற்கு இறை யிரங்காய்'' என்றும் ''ஆவாவென்று தொண்டர்க்குத் தானருளி'' என்றும் ஆழ்வார்களருளிய ஈரச் சொற்கள் பகவத்குணரஸிகர்களினுள்ளத்துள்ளே ஊறிக் கிடக்கின்றன. ஆவா வென்று என்றது ஹா ஹா என்று என்றபடி. துக்கமுடையவனுக்கே ஹா ஹாகாரமுண்டாகும். அந்த ஹா ஹா காரம் எம்பெருமானுக்குள்ளதாக நிர்விவாத ஸித்தம். ஆகிலும் ஆநந்த மயனாக ஓதப்பட்ட எம்பெருமானுக்கும் துக்க முண்டென்று எப்படி இசைய முடியுமென்றே சிலர் பிடிவாதமாகக் கேட்கிறார்கள். இதற்கு த்ருப்திகரமாகச் சொல்லுகிறோம். எம்பெருமான் நிரங்குச ஸ்வதந்த்ரனென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றானன்றோ? அப்படிப்பட்ட பெருமானை ஆச்ரித பரதந்த்ரனென்று எங்ஙனம் இசைகின்றீர்கள் என்று கேட்போம். அதையும் நாங்கள் இசைகின்றிலோம் என்றே அவர்கள் விடை கூறுவர்கள். அப்படியானால் விரோத பரிஹார மென்கிற ரஹஸ்யத்தில் தேசிகர் வெகு அழகாக அருளிச் செய்துள்ள இந்த ஸ்ரீஸூக்திகளுக்கு என்ன கதி?

'ஸ்வதந்த்ரனுன ராஜா அநுகூலரான மந்த்ரிகளுக்காதல், வல்லபையான மஹிஷிக் காதல் பாலரான புத்திரர்களுக் காதல் தன் இச்சையாலே சொல்லிற்றுச் செய்யுங் கட்டளையிலே ஈச்வரனும் ஸர்வ சக்தியாய் நிரபேக்ஷனுயிருந்து வைத்து அழைத்த விடங்களில் வந்தும் அபேக்ஷித்தவற்றைச் செய்யவும் 'இடைச்சிகளுள்ளிட்டார் கட்டவு மடிக்கவு' மிசைந்தும் இப்படி நடக்கிற கட்டளை யெல்லாம்...... தன் ஸ்வாதந்த்ர்யகாஷ்டையான படியாலே இந்த பாரதந்த்ர்யம் விருத்தமன்று'' இத்யாதிகள்.

இதற்குமேல், ''நிரங்குச ஸ்வதந்த்ரனுக்குண்டான ஆச்ரித பாரதந்த்ர்ய மானது அந்த ஸ்வாதந்த்ர்யத்தின் பரமகாஷ்டையென்று தேறுகிறது. அதாவது, ஸ்வதந்திரன் எப்படியிருந்தாலும் எது செய்தாலும் கேட்க முடியாதாகையாலே அத்தகைய கேட்பாரற்ற ஸ்வாதந்த்ரியத்தினுல் அடியார்க்கு விதேயனுகவும் தன்னையமைத்துக் கொள்ளுகிறுனென்றதாகிறது. இது பொருத்தமானதே. இது ப்ரக்ருத விஷயத்திற்கு எங்ஙனம் ஸ்மாதானமாகும்? ஆச்ரித பாரதந்த்ர்யமும் ஸ்வாதந்த்ரியத்தின் ஒருவகையே யென்று கொள்வதுபோல, துஃக்கசாலித்வமும் ஆநந்த மயத்வத்தினுடைய ஒரு வகையே யென்று சொல்லியாக வேண்டுமே. அப் படிச் சொல்லமுடியுமோ?" என்று சங்கிக்கலாகும். இதற்குச் சொல்லுகிறோம்.

ஆநந்தமயத்வ மென்பதும் கல்யாணகுணசாலித்வ மென்பதும் பர்யாயம். கல் யாண குணசாலித்வத்திற்கு எதிர்த்தட்டானது ஹேய ஸம்பந்தம். அந்த ஹேய ஸம்பந்தம் இசையப் பட்டால்தான் ஆநந்தமயத்வம் பாதிக்கப்பட்டதாகும். எம் பெருமானுக்கு இசையப்படுகிற துக்கம் ஹேய ஸம்பந்த ரூபமன்று. கல்யாண குணங்களிற் சிறந்தது. ''பஹவோ ந்ருப! கல்யாணகுணுஃ புத்ரஸ்ய ஸந்தி தே" என்று [ஸ்ரீ ராமாயணத்தில்] கல்யாண குணங்களென்ற மகுடத்தின் கீழே *வ்யஸ நேஷு மநுஷ்யாணும் ப்ருசம் பவதி து:க்கித:* என்று சொல்லியிருக்கையாலே இந்த துக்கம் ஹேயமென்று வாய் திறக்க இடமே யில்லை. ஆகவே, கல்யாண குணசாலித்வ பர்யாயமான ஆநந்தமயத்வத்தோடு கல்யாண குணுத்மகமான இந்த து:க்கித்வம் விருத்தமன்று என்று தேறிற்று.

இங்கும் ''துக்கம் எவ்விதத்திலும் ஹேயமே யாகும்; அபுருஷார்த்தமேயான விது அகில ஹேய ப்ரத்யநீகன் பக்கலிலே ஸம்பவிக்கவே மாட்டாது; பரதுஃக்க ப்ர யுக்தமான துக்கம் ஹேயமன்று என்றுல் அப்போது துக்கமென்கிற சொல்லை யிட்டு வழங்கவே கூடாது. துக்கமென்றுல் அது ஹேயமாக வல்லது வேறுவிதமாக இருக்க முடியாதே. துக்கமாயும் அஹேயமாயு மிருக்கின்ற தென்றுல் 'நெருப்பாயும் குளிர்ந்ததாயுமிருக்கிறது' என்பது போல் வ்யாஹத பாஷணமேயாகும்'' என்றிப்படி வலிதாகச் சொல்லியும் எழுதியும் க்ஷேபிக்கின்றவர்களுக்கு ஸமஞ்ஜஸமான விடை கொடுக்கிறோம். 'துக்கம் எந்தவிதத்திலும் தோஷமே' என்கிறவர்கள் ஆனந்தம் எந்த விதத்திலும் குணமே யென்று கொண்டவர்களாகவேண்டும்; ஒருவன் பகவதபசாரப் பட்டும் பாகவதாபசாரப்பட்டும் ஆநந்தித்தானுகில் அவ்வானந்தமும் குணமேயோ? அஸுர ராக்ஷஸர்கள் பரஹிம்ஸை புரிந்து அபரிமிதமான ஆனந்தமடைந்தால் அவ் வானந்தம் ஹேயமன்று, குணமே தான் என்று அறிஞர் கூறுவர்களோ? உண்மையில்

குணத்வ தோஷத்வங்கள் பிறர் நினைக்கிற படியில்லை. உபாதி பேதத்தாலே தோஷமே குணமாகவும், குணமே தோஷமாகவும் கொள்ளப்படுகிற முறை எங்குமுள்ளது. ஈர நெஞ்சினர் இளநெஞ்சினர் என்று புகழப்படுகிற தயாளுக்களுக்குப் பிறர் நோவு காரணமாகத் தோன்றும் இரக்கம் பரம குணமேயல்லது தோஷமன்று. ப்ரத்யுத இந்த இரக்க முண்டாகாமையே பெரிய தோஷமாகும். இது மநுஷ்யர்களுக்கும் பகவானுக்கு மொக்கும். மநுஷ்யர்களுக்கு இது குணமானாலும் பகவானுக்கு மஹா தோஷமே யாகுமென்று பிறர் கூறுவதும் எழுதுவதும் *வ்யஸனேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித:* இத்யாதி ப்ரமாணங்கள் நடையாடாத நாட்டிலே நிகழத் தகும்.

இவை நம்முடைய புதிய வார்த்தைகளல்ல. எல்லாம் நம் பெரியார்களுடைய திவ்ய க்ரந்தங்களிலுள்ளவையே. ஸஹஸ்ரநாமத்தில் *கரணம் காரணம் கர்த்தா விகர்த்தா கஹநோ குஹ:* என்ற விடத்தில் கர்த்தா விகர்த்தா கஹந: என்ற மூன்று திருநாமங்களினுடையவும் பாஷ்யத்திலுள்ள பட்டர் ஸ்ரீஸூக்திகளின் மேல் அவருடைய திருவுள்ளம் இன்னதென்று ஸுஸ்பஷ்டமாக நிர்ணயித்துக்காட்டுவோம். விகர்த்தா என்கிற திருநாமத்தின் பாஷ்யத்தில் "ஸ்வார்த்த ஹர்ஷ சோகாத்யபாவேபி பரார்த்த தத்ப்ரஸக்தி: அதோஷ:; அந்யதா பரது:க்க து:க்கித்வாதயோ குணா: கதமஸ்யஸ்யு:?" என்றுள்ள ஸ்ரீஸூக்தியொன்று போதுமே. 'பரது:க்கது:க்கித்வாதய: அஸ்ய கதம் குணா: ஸ்யு:'' என்று அன்வயிக்க.

இப்பட்டர் தாம் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தின் முடிவில் "தயா அந்யேஷாம் துக்காப்ரஸஹநம்" என்று ஸுவ்யக்தமாகக் கூறியுள்ளார். 'பிறர்படும் துக்கத்தைக் கண்டு ஸஹித்திருக்கமாட்டாமையே தயை' என்று இதன் பொருள். ஸஹிஷ்ணுத்வமாவது என்ன? அஸஹிஷ்ணுத்வமாவது என்ன? என்பதை யாவரும் எளிதிலறிவார்கள். "இந்தத் துக்கத்தைப் பல்லைக்கடித்துக் கொண்டு ஸஹித்திருக்கிறேன்" என்கிறானொருவன். "ஐயோ! இந்த துக்கம் என்னால் ஸஹிக்க முடியவில்லையே!" என்கிறான் மற்றொருவன். இவ்விரண்டிடத்திலும் தாற்பரியமென்ன? ஸஹிக்கக்கூடிய அளவிலுள்ள துக்கம் ஸாதாரண துக்கமாகும். ஸஹிக்கமுடியாத வெல்லையிலுள்ள துக்கம் அபரிமிதமான துக்கமாகும். [ஸ்தோத்ர ரத்நத்தில் *ஸர்வம் ஸஹே* என்றவிடத்தில் "ஸர்வம் துக்கம் அநுபவிஷ்யாமி" என்பது தேசிகபாஷ்யம்.] ஏவஞ்ச, 'எம்பெருமான் பரதுக்காஸஹிஷ்ணு' என்றால் பிறர் துக்கப்படும் போது தான் அபரிமிதமாக துக்கப்படுமவன் என்றதாகுமே யல்லது வேறொன்றல்ல.

இவருடைய திருவடி பணிந்த வேதாசார்ய பட்டர் அருளிய க்ஷமாஷோடசியில் "மத்பாபக்ஷபணாய யோஜயஸி சேத் கோரேண தண்டேந மாம் ரங்காதீச்வர! கேவலாககரணாத் துக்கம் மம ஸ்யாத் மஹத், தத்த்ரஷ்டுர் பவதோபி து:க்கமதுலம் கோரம் தயாளோ! பவேத் தஸ்மாத் தேபி ஸுகாய மத்க்ருதமிதம் ஸர்வம் த்வயா க்ஷம்யதாம்." என்றுள்ள ச்லோகமும் பிறருடைய கலக்கத்தைப் போக்கி நல்ல தெளிவைத் தரவல்லது. பகவானே! நீ தயாளுவாதலால், நான் துக்கப்படுமளவில் அந்த துக்கத்தைக் கண்டு நீயும் துக்கப்படவேண்டி வருமே யென்று ஸ்பஷ்டமாகக் கூறியுள்ளாரிதில். சேதநவர்க்கங்கள் கரண களேபரங்களை

யிழந்து துக்கிக்குமளவில் எம்பெருமானுடைய திருவுள்ளம் எப்படியிருந்ததென்பதை யருளிச் செய்யாநின்ற பட்டர் ["அசிதவிசேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரத: கரணகளேபரைர் கடயிதும் தயமாநமநா:"] என்றார். இங்கு தயமாநமநா: என்றதற்குப் பொருள் விளங்காமலிருந்தது. அதை நன்கு விளக்கி யருளினவர் தேசிகன். தயாசதகத்தில்—"அசிதவிசிஷ்டாந் ப்ரளயே ஐந்தூநவலோக்ய ஜாதநிர்வேதா" என்றார். தயாளுவான எம்பெருமான் செய்தருளும் செயல்களை யெல்லாம் தயையின் மேல் ஏறிட்டுத் துதிப்பது இந்த ஸ்தோத்திரத்தின் வைகரியாதலால், இந்த ச்லோகத்தில் "வ்ருஷசைலநாத கருணே!" என்று தயையை ஸம்போதித்து 'த்வம் ஜாதநிர்வேதா' என்று கூறியிருப்பதானது பகவானையே ஜாதநிர்வேதனாகக் கூறினபடி யல்லது வேறில்லை யென்பது நிர்விவாதம். இங்கு "ஐந்தூந் அவலோக்ய ஜாதநிர்வேதா" என்று நிஸ்ஸந்தேஹமாக வுள்ளது. இப்படிப்பட்ட ப்ரமாணங்கள் ஒன்றல்ல இரண்டல்ல; நூறுயிரக் கணக்கில் கிடைக்கும். எந்த ப்ரமாணமும் மேலெடுத்துக் காட்டிய தயாசதக ஸூக்திக்கு ஈடாகாது. இதை விட வ்யக்தமாக வேறொரு ப்ரமாணம் கிடைக்கமாட்டாது.

அகில ஹேயப்ரத்யநீகனுக்கு ஹேயமான துக்கம் கூடாது என்கிறவிதுவே, ப்ரதிவாதிகளின் ப்ரதானவாதமாகும். துக்கமென்றால் அது ஹேயமாகத் தானிருக்கும்; குணமாகக் கூடிய துக்கம் இருக்கவே மாட்டாது. என்கிற மருள் பிறரிடம் மலிந்து கிடக்கிறது. அவர்கள் இந்த ஸஹஸ்ரநாமத்திலேயே அவிஜ்ஞாதா என்கிற திருநாமத்தையும் உற்று நோக்கவேணும். அவிஜ்ஞாதா என்பதற்கு அறிவில்லாதவன் என்று பொருள். ஸர்வஜ்ஞனை பகவானை அறிவில்லாதவனென்று எப்படிச் சொல்லலாம்? இங்கு சங்கரபாஷ்யம் அசாருடைய மதப்படி யுள்ளது. பகவான் ஜ்ஞாநஸ்வரூபி யாதலால் ஜ்ஞாதா அல்லர் என்று அவர் எளிதாக எழுதி முடித்திட்டார். இந்த பட்டருடைய பாஷ்யமோ வென்னில், அடியார்களுடைய குற்றங்களை அறியாதவராதலால் அதுகாரணமாக அவிஜ்ஞாதா என்னத் தகும் என்று ஸாதித்துவிட்டு உடனே, எதையும் அறியக் கடமைப்பட்டவரான பகவானுக்குச் சில விஷயங்கள் தெரியாதென்றால் கொத்தைவாராதோ? ஸர்வஜ்ஞனுக்கு அஜ்ஞத்வ மென்பது ஹேயமல்லவோ என்று சங்கித்துக் கொண்டு, பக்தர்கள் விஷயத்தில் குற்றங்களை யுணராமை மஹாகுணமே யல்லது ஹேயமன்று: என்றும் ஸாதித்துள்ளார். "ஸர்வஜ்ஞதா மேவ முபாலபாமஹே த்வம் ஹி அஜ்ஞ ஏவ ஆச்ரிததோஷஜோஷண:" என்று தமது திருத்தகப்பனார் [கூரத்தாழ்வான்] அருளிச் செய்திருப்பதாகவும் ஸம்வாதம் காட்டியருளினர். இங்கு இவ்விதமாக அருளிச் செய்திருக்கின்ற பட்டர் தாமே 'விகர்த்தா' என்னும் திருநாமத்தின் பாஷ்யமு மருளிச் செய்தவரென்பதை மறக்கலாகாது. 'ஸர்வஜ்ஞனுக்கு அஜ்ஞத்வம் தோஷமன்று, குணந்தான்' என்று இங்கு ஸாதித்தது போலவே 'ஆநந்தமயனுக்குப் பரது:க்க து:கித்வம் தோஷமன்று, குணந்தான்' என்று அங்கு ஸாதித்தார். இதற்கு அபார்த்தம் செய்வது அநுசிதமென்பது இதனாலும் திடமாகும்.

சாந்தோக்யோபநிஷத்தில் "அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விசோக:" என்றுள்ளது. அபஹதபாப்மா— பாபமில்லாதவன்; விசோக:—சோகமில்லாதவன். இங்கு பாஷ்யம் செய்தருளியிருக்கிற ப்ராமாணிகரான ரங்கராமாநுஜ ஸ்வாமிகள் வெகு ஆச்சரியமான நிர்வாஹம் காட்டியுள்ளார். அவசியம் எடுத்துப்பார்க்க

வேணும். விசோக: என்றவிடத்தில் சொல்லவேண்டியதை யெல்லாம் அபஹதபாப்மாவிலேயே அவர் அழகாகச் சொல்லிமுடித்தார். அதை அப்படியே அநுவதிப் போமிங்கு—பாப்மா என்பது ஸுக்ருத துஷ்க்ருதங்களுக்குப் பொதுவான பெயர். பகவான் பாப்மாவைச் செய்யாதவனென்று பொருளல்ல. புண்ய பாப ஸஜாதீயங்களான கருமங்களை அவன் செய்யவே செய்கிறான். ஆனால் அவற்றின் பலன் தன் பக்கலில் உண்டாகப் பெறுவதில்லை. செய்த காரியங்களுக்குப் பலன் உண்டாகாமலிருக்குமோ? ஸுக்ருத துஷ்க்ருதங்களானவை தம் தம் பலன்களை உண்டாக்கியே தீருமன்றோ வென்னில்; அந்த நியமம் அஸ்மதாதிகள் விஷயத்திலேயாம், பகவான் தான் பாபம் செய்தாலும் அதற்குள்ள பலப்ரஜநந சக்தியைத் தடுக்கவல்ல ஒரு விலக்ஷண ஸ்வபாவ விசேஷமுடையவன். இங்கு அவருடைய பங்க்தி யிது "ஈச்வரேண க்ருதானி புண்யபாபஸஜாதீயானி கர்மாணி ந சுபாசுபபல ப்ரஜனனசக்தாநீத்யர்த்த:. க்ருதேபி பாபே தத்பலஜனன சக்திப்ரதிபடத்வலக்ஷண: கச்சிதீச்வரஸ்ய ஸ்வபாவவிசேஷ: அபஹதபாப்மத்வம்" என்று. இதனால் என்ன சொல்லிற்றாகிற தென்னில்; நாம் பாபம் செய்தால் ஹேயஸம்பந்தம் அவசியம் பெற்றோமாவோம். பகவான் அங்ஙனல்லன். அவனது செயல் ஹேயாப்த்திக்கு ஹேதுவாகிறதில்லை. ஏனென்றால், அதுதான் அவனுடைய விலக்ஷண வைபவம். இப்படியே ச்ருத ப்ரகாசிகாசார்யரும் அருளிச் செய்திருப்பதாகவும் ரங்கராமாநுஜஸ்வாமி எடுத்துக் காட்டியுள்ளார். அந்தரதிகரண ச்ருதப்ரகாசிகையில் இதை விரிவாகக் காணலாம். இதைக் கொண்டே விசோக சப்தார்த்தத்தையும் நிர்ணயிக்கலாம். அவதாரங்களில் சோகமுண்டு. ஆனால் அது ஹேயகுணபத்திஹேதுவாகிறதில்லை. சோகமானால் ஹேயாபத்தி வந்து தீருமே யென்னில்; அதை வரவொட்டாமல் தடுக்கிற சக்தியுடைமையாகிற ஸ்வபாவ விசேஷம் பகவானுக்குள்ளதாதலால் இப்படிப்பட்ட குணங்களையும் தோஷமாகப் பார்க்கவேண்டா வென்றதாயிற்று.

பட்டருடைய பாஷ்யத்தில் பலவிடங்களில் இந்த மஹா குணம் நிரூபிக்கப் படுகிறது. அநிர்விண்ண: என்று ஒரு திருநாமம். இது விகர்த்தா என்கிற திருநாமத் திற்கு நேரே எதிரானது. *அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்சு:* என்று விருத்த தர்ம வை சிஷ்ட்யத்தை [அதாவது அஜ்ஞத்வ ஸர்வஜ்ஞத்வங்களை] ஏகஸ்தலத்திலே சொல் லிற்று; இங்கு அப்படியல்லாமல் வெவ்வேறிடத்திலே சொல்லிற்று என்றிவ் வளவே வாசியுள்ளது. [விகர்த்தா— துக்கமுள்ளவன்; அநிர்விண்ண:—துக்கமில்லா தவன்] துக்கமில்லாமையை சங்கராசார்யர் நிர்வஹிக்கிற விதம் வேறு; பட்டர் நிர்வஹிக்கிற விதம் வேறு. துக்கத்தின் அத்யந்தாபாவமுள்ளவன் என்பது சங்கர ஹ்ருதயம். ஆழ்வார்களின் ஈரச் சொற்களிலே ஊறின பட்டர் 'துக்கத்தின் ப்ரத்வம்ஸாபாவமுள்ளவன்' என்கிற திவ்யமான பொருளைக் காட்டுகிறார். திருவாய்மொழியில் *துயரறு சுடரடி' என்றவிடத்திற்கு துயரறுக்கும் சுடரடி யென்கிற பொருளைத்தள்ளி, 'துயரறும் சுடரடி' [ஸம்ஸாரிகள் துயரற, தான் துயரற்ற படி] என்று பொருளருளிச் செய்த எம்பெருமானாரது திருவுள்ளத்திற் கிணங்கவாயிற்று பட்டரருளிச் செய்திருப்பது. அதாவது, ஸம்ஸாரப் படுகுழியில் விழுந்து துயருற்றுக் கிடந்தவனை அதில் நின்று மெடுத்துத் தன் திருவடிகளை யடைவித்து இவ்வகையாலே அவன் துயர் தீரப் பெற்றானென்றறிந்தவாறே

தானும் துயர் தீர்ந்தவன் என்பது இங்கு பட்டர் விவரித்தருளின இன் சுவைப் பொருள். "க்ருக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ" என்கிற ஸ்ரீராமாயண வசனத்தை இதற்கு ஸம்வாத ப்ரமாணமாகவும் காட்டியருளினர். இதில் ப்ரமுமோத என்பதே போதுமாயிருக்க, விஜ்வர: என்றும் மஹர்ஷி கூறினது ஆழ்ந்து நோக்கத்தக்கது. "ஸோஹம் பருஷிதஸ் தேந தாஸவச்சாவமாநித:" என்று விபீஷணாழ்வான் சொல்லக்கேட்ட பெருமாளுடைய திருவுள்ளம் எவ்வளவோ நொந்து கிடந்ததென்றும் அந்த நோவெல்லாம் இப்போது தான் தீரப்பெற்றதென்றும் ஸுஸ்பஷ்டமாக மஹர்ஷி காட்டியுள்ளார். இந்த வசனத்தில் விஜ்வர: என்பதே உயிரான சொல். அதற்கு அங்கு என்ன பொருளோ, அதுவே தான் அநிர்விண்ண: என்பதற்கும்—என்று பட்டர் தவிர மற்றொருவரால் இது கண்டுபிடிக்கமுடியுமோ? [விஜ்வர:—முன்னே ஜ்வரமிருந்து பின்னே அது தீரப்பெற்றவன். அநிர்விண்ண:—முன்னே நிர்வேதமிருந்து பின்னே அது தொலையப்பெற்றவன்.] ஸஹஸ்ரநாமத்தில் 'அநிர்விண்ண:' என்கிற திருநாமம் இரண்டிடத்தில் வருகிறது. "ஆநந்தமயனாகை யாலே எவ்விதத்திலும் நிர்வேதமில்லாதவன்" என்கிற பொருளை ஓரிடத்திலாவது பட்டர் செய்தருளி யிருக்கலாம். பகவத் குணதர்ப்பணமென்று திருநாமம் சாத்தப் பெற்ற தமது திவ்ய க்ரந்தத்தில் அப்பொருள் தலைகாட்டுமோ? அப்போது பகவத் குணங்களுக்குத் தர்ப்பணமன்றே ஆகும். (1) நிர்வேத கார்யமில்லாதவரென்று ஓரிடத்தில் பொருள் கூறினர்; உலகில் ஒருவன் ஒரு பெரிய காரியஞ் செய்து அது பலிக்காவிட்டவாறே நிர்வேதமடைந்து வீணான இக்காரியத்தை இனிமேலும் ஏதுக்குச் செய்வதென்று வைரஸ்யமடைந்து ஓய்ந்து நிற்பதுண்டு; இவ்விதமாகவே எம்பெருமானுக்கும் ஜகத் வ்யாபாரத்தில் வைபல்யம் காணா நிற்கச் செய்தேயும் நிர்வேதமடைந்து கைவாங்கி யிராதே என்றேனுமொரு நாள் ஸபலமாகு மென்று நினைத்து மேன்மேலும் ஜகத் ஸ்ருஷ்டியில் ஒருப்படுமவன் என்று விவரணமுள்ளது. (2) நிர்வேதம் தீரப்பெற்றவனென்று மற்றோரிடத்தில் பொருள் கூறினர். *சோம்பாது இப்பல்லுருவை யெல்லாம் படர்வித்த வித்தா* என்கிற பெரிய திருவந்தாதிப் பாசுரத்தைக் கொண்டு முந்தின பொருள் செய்தார். *துயரறும் சுடரடியென்ற எம்பெருமானார் நிர்வாஹத்தைக் கொண்டும்,* விஜ்வர: இத்யாதியைக் கொண்டும் பிந்தின பொருள் பணித்தார். சேதநர்களின் வைமுக்யத்தைக் கண்டு நிர்வேதப் படுவதும் ஆபிமுக்யத்தைக் கண்டு நிர்வேதம் தீரப் பெறுவதுமான விக்ருதிகள் எம்பெருமானுக்கு உள்ளனவென்று நிரூபிக்குமிவ்விஷயத்தில் நம் ஆழ்வாராசார்யர்களனைவரும் ஏககண்டர்கள். இந்த மஹா குணம் எம்பெருமானுக்கு இல்லையாகில் ம்ருத்பிண்டத்தோடு அவனோடு வாசியில்லையாமன்றே.

"க்ருபா தயா அநுகம்பா ஸ்யாத் அநுக்ரோசோபி" என்கிற அமரகோசம் அறியாதாரில்லை. தயைக்கு அநுகம்பை யென்றும் அநுக்ரோச மென்றும் பர்யாய நாமமிட்டார்கள். துக்கத்தினால் நடுங்கினவனைக் கண்டு தானும் நடுங்குகை அநுகம்பா; துக்கத்தினால் அழுகிறவனைக் கண்டு தானும் அழுகை அநுக்ரோசம். இவற்றுக்கு இவையல்ல பொருளென்று மறுப்பாரில்லை. சைதந்ய முள்ளவிடத்தே இது இருந்தே தீரும். ஸர்வசக்தித்வம் முதலியவை எத்தனை யிருந்தாலும் அவை இதற்கு ப்ரதிபந்தகங்களாகமாட்டா. "ஸ ஏகாகீ ந ரமேத" என்ற உபநிஷத் வாக்யத்தை

உள்ளத்துள்ளே உறைய வைக்கவேணும். ரதியாவது என்ன? அரதி யாவது என்ன? எதனுலிங்கு அரதி கூறிற்று? என்று ஆராயவேணுமே. இன்று புதிதாக நாம் ஆராய வேண்டாவே. பரமக்ருபாளுக்களான ஆசார்யர்கள் எடுத்துக் காட்டாததொன் றில்லையே.

இனி ப்ரக்ருத விவாதஸ்தலத்தில் பட்டர் விகர்த்தா என்கிற திருநாமத்தின் பாஷ்யத்தில் உதாஹரிக்கவேண்டிய *வ்யஸநேஷு மநுஷ்யாணு மித்யாதி ச்லோ கத்தை அதற்கு முந்திய கர்த்தா என்கிற திருநாமத்தின் பாஷ்யத்திலேயே உதா ஹரித்ததும், அந்த ப்ரமாணத்தோடு கூட *பஹுஸ்யாம் ப்ரஜாயேய* என்கிற உபநிஷத் வாக்யத்தையும் கூட்டி உதாஹ்ரித்ததும் எதற்காகவென்று ஆலோசிக்க வேணும். *வ்யஸநேஷு மநுஷ்யாணு மென்கிற ப்ரமாணத்தின் அர்த்தம் வேறு, "பஹு ஸ்யாம் ப்ரஜாயேய" என்கிற ப்ரமாணத்தின் அர்த்தம் வேறு. இதற்கும் அதற்கும் என்ன ஸம்பந்தம்? இரண்டையும் கூட்டி ஒருங்கே உதாஹரித்ததற்குத் திருவுள்ள மென்ன? என்பது மிக முக்கியமாக விமர்சிக்கத் தக்கது. விமர்சிக்குமள வில் தேறுவது இது காண்மின். பட்டர் ஒவ்வொரு திருநாமத்திலும் மிகவும் ஆழ்ந்து பாஷ்யம் செய்தருள்பவர். "பரர்த்தி: பரமஸ்பஷ்டஸ் துஷ்ட: புஷ்டச் சுபே க்ஷண:" என்கிற திருநாமங்களுக்குப் பிறகு ராம: என்கிற திருநாமம் வருகிறது. இப் படி ஐந்தாறு திருநாமங்களுக்கு அப்பாலுள்ளதான ராம நாமத்திலே திருக்கண் செலுத்தி *பரர்த்தி இத்யாதி திருநாமங்களையும் ராமாவதார பரங்களாகவே கொண்டு பாஷ்யமிட்டருளினர். "இத உபரி ம்ருதஸஞ்ஜீவனம் ராமவ்ருத்தாந்த: ப்ரஸ்தூயதே." ஐந்து திருநாமங்களுக்கு முன்னமே அவதாரிகை யிட்டருளினர். இங் ஙனே பலவிடமுண்டு. இதனுல், கீழ்த் திருநாமங்களுக்கும் மேல் திருநாமங்களுக்கும் ஸாத்யமான வரையில் தொடர்பு அமைத்து பாஷ்யம் செய்வது பட்டருடைய இயல்பு என்பது அறியப்பெறலாகும். [சங்கர பாஷ்ய ப்ரக்ரியை இங்ஙனே யில்லை.] ப்ரக்ருதம் விகர்த்தா என்று மேல்வரும் திருநாமத்திற்கும் கர்த்தா என்று கீழுள்ள திருநாமத்திற்கும் சாஸ்த்ரீயமான தொடர்பு காட்டி பாஷ்யம் செய்தருளு கிறுர். விகர்த்கா என்கிற திருநாமத்திற்கு 'விசித்ர ஜகத் ஸ்ருஷ்டியைப் பண்ணின வர்' என்று பொருள் எழுதிய சங்கராசார்யரைப் போலன்றியே 'ஸுக துக்கங் களை யடைந்து விகாரப்படுபவர்' என்று விலக்ஷணமான பொருளை யருளிச் செய்த வராதலால் 'இதற்கு உபபாதநம் கர்த்தா என்கிற கீழ்த் திருநாமம்' என்று கொண்டு அதை ஸப்ரமாணமாக விவரிக்கிறுர் பட்டர். *வ்யஸநேஷு மநுஷ்யாணுமித்யாதி ஸ்ரீராமாயண ச்லோகத்தில் "பிதேவ" என்றிருப்பதை உயிராகக் கொண் டார். கர்த்தா என்பதற்கு பிதா என்று பொருள்; பித்ருத்வாதேவ விகர்த்தா—பிதா வாகையினுலேயே விகாரப்படுகைக்கு ஔசித்யமுண்டு என்று காட்டவேண்டி பஹு ஸ்யாமென்றகிற பிரமாணத்தைக் காட்டியருளினர். இந்த உபநிஷத் வாக்யமானது காரணப்ரகரணத்திலுள்ளது. காரணத்வத்தையும் பித்ருத்வத்தையும் பர்யாய மாகக் கொண்டவர்கள் நம் ஆசார்யர்கள். ஆனதுபற்றியே நவவித ஸம்பந்தங் களை ப்ரதிபாதிக்கின்ற *பிதா ச ரக்ஷக: சேஷீ* என்னும் ச்லோகத்தில் காரண மென்ன வேண்டிய இடத்தில் பிதா என்று பிரயோகிக்கப் பட்டது "பிதா ச ரக்ஷக:" என்கிற விது ப்ரணவத்திலுள்ள அகாரத்தின் பொருளை ஸங்க்ரஹிப்பது. அகாரமானது ப்ரக்ருதி சக்தியினுல் காரணத்வத்தையும் தாது சக்தியினுல் ரக்ஷகத்

வத்தையும் தெரிவிக்கின்றதென்று நிரூபித்தருளுகிறார்கள். குடத்தைக் குறித்து குலால தண்ட சக்ராதிகளுக்குள்ள காரணத்வம் போலன்றிக்கே ஜகத்தைக் குறித்து எம்பெருமானுக்குள்ள காரணத்வம் பித்ருத்வ ரூபமென்கிறார்கள். புத்ரன் து:க்கிதனுமளவில் பிதாவும் து:க்கிதனாக ப்ரார்ப்தமன்றோ என்று காட்டுவதற்காகவே இங்கு பட்டர் *பஹு ஸ்யாமித்யாதி ச்ருதியைச் சேர்த்துக் கொண்டார். அந்த ச்ருதியில் *பஹு ஸ்பாத் என்று ப்ரதம புருஷனைச் சொல்லாமல் ஸ்யாம் என்று உத்தம புருஷனைச் சொல்லியிருப்பதிலிருந்து ஒரு சிறந்த ரஸம் கண்டார். உலகில் பிதாக்கள் 'அஹம் புத்ரம் ஜநயேயம்' என்பார்களே யன்றி 'அஹம் புத்ர: ஸ்யாம்' என்னமாட்டார்கள். அவர்களுக்கு ப்ருதகபிமாநித்வமுள்ளது. புத்ரனுடைய சோகத்தில் ஸந்தோஷப்படுமவர்களும் அவனுடைய ஸந்தோஷத்தில் துக்கிப்பவர்களுமான பிதாக்களேயும் உலகிற் காணா நின்றோம். தத்வ்யாவ்ருத்தியையும் பட்டர் காட்டியருளுகிறார். அதற்காகவே இங்கு "தததிசயேந வா ததவஸ்த்தாபிமானீ ஹி பகவான்" என்றுமருளிச் செய்தது. விகர்த்தா என்கிற திருநாமத்தின் பாஷ்யத்தின் அவதாரிகையிலுள்ள "அத ஏவ " என்றதற்கு 'பகவான் லோக விலக்ஷண பிதா வாகையினாலேதான், என்று பொருள். *தஞ்ச மாகிய தந்தை தாயொடு* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின் ஈட்டிலருளிச் செய்த இன்சுவைப் பொருள்களெல்லாம் இங்கு அநுஸந்தேயம்.

இனி இந்த தயாகுணத்தை நம் ஆசார்யர்கள் விபவாவதார மாத்ர விச்ராந்தம் போல் அருளிச் செய்வது எது கொண்டு? மற்றை நிலைகளில் இது கிடையாதா? அசக்தனுக்குத் தான் பரது:க்கது:க்கித்வம் இருக்கும். ஸர்வசக்தனுக்கு அது உண்டாக ப்ரஸக்தியே யில்லை யென்பாருடைய வாதத்திற்கு விடை யிறுக்கும்போது, ஸர்வ சக்தனான எம்பெருமானும் அசக்தனைப் போல் பாவனை கொண்டு அவதரித்தபடியால் அந்த அசக்திக்கு இது கூடுமென்று சொன்னால் தவறென்ன? ஆநந்தமயத்வமும் கல்யாணகுணசாலித்வமும் பர்யாயமென்று சொன்னதற்கு கருத்தென்ன? கோசங்களில் பர்யாயமாகப்படிக்கபட்டிருக்கும் நாமங்கள் போல் இவை பர்யாயமாகுமோ? என்கிற வினாக்களுக்கும் ஸப்ரமாணமாக தெளிய விடை யிறுக்கிறோம்.

"பரோ வா வ்யூஹோ வா விபவ உத வார்ச்சாவதரண: பவந் வாந்தர்யாமீ வரவரத யோ யோ பவஸி வை, ஸ ஸ த்வம் ஸந்நைசான் வரகுணகணான் பிப்ரதகிலாந்" என்று ஆழ்வான் மிகத் தெளிவாக அருளிச் செய்திருக்கையாலே பரத்வாதி பஞ்சகத்திலும் ஸகலகுண ஸம்ருத்திக்கு யாதொரு குறையும் சொல்ல முடியாது. ஆனால், பட்டர் *குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்* என்று ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் அருளிச் செய்துள்ளார்; தன்னிடத்துள்ள குணங்களை வெளியிடுதற்காகவே அவதாரங்கள் ஏற்பட்டன வென்று அருளிச் செய்தபடி. உண்மையில் குணவிசேஷங்களை நாம் விபவாவதாரங்களில் தான் ஆசை தீர அநுபவிக்க முடிகிறது. ஸ்ரீராமாயணம் தொடங்கும் போதே வால்மீகி நாரத ஸம்வாத அமைப்பு உள்ளது. "கோ ந்வஸ்மின் ஸாம்ப்ரதம் லோகே குணவான் கச்ச வீர்யவான்?" என்று தொடங்கிப் பதினாறு குணங்களை யெடுத்துக் கூறி இந்த குணங்களையுடையவன் யாவன்? என்று வால்மீகி கேட்பது; அதற்கு நாரதர்

"பஹவோ துர்லபாச்சைவ பே த்வயா கீர்த்திதா குணா:, முனே வக்ஷ்யாம்யஹம் புத்த்வா தைர்யுக்த: ச்ரூயதாம் நர:." என்று அப்படிப்பட்ட குணசாலியைச் சொல்லுகேன் கேளாயென்று விடையிறுப்பது. குணவிஷ்காரத்திற்காகவே அவதார மமைந்ததென்று விளக்குவதற்காகவேயன்றோ இந்த ஸம்வாதம் இந்த வகையில் அமைந்துள்ளது.

இது கொண்டே பட்டர் *குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்* என்றருளிச் செய்தது. ராவண கம்ஸ சிசுபாலாதிகளை வதம் செய்வதற்காகவே அவதாரங்கள் அமைந்தனவென்று பலர் நினைத்திருப்பர்கள்; ஸங்கல்பமாத்ர ஸாத்யமான அதற்காக பகவான் பயணமெடுத்து வரவேண்டிய அவசியமே யில்லை யென்றும், அது வொரு வ்யாஜமாத்ரமே; உள்ளே அமுங்கிக் கிடக்கிற திருக்குணங்களை ஸாதுஜநங்களிடத்திலே பிரகாசிப்பித்தற்காவே அவதாரமென்றும் ஸகலாசார்யர்களும் ஒருமிடருக அருளிச் செய்வது. இதனை ஸ்வாமி எம்பெருமானாரும் "அந்தஸ்தத்தர்மோபதேசாத்" என்ற ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் ப்ராஸங்கிகமாக அருளிச் செய்துள்ளார். ஆகவே, குணப்ரகாசநத்திற்கென்றே ஐகாந்திகமாக அமைந்த அவதாரங்களில் குண நிருபணம் எளிது என்பது நம் ஆசார்யர்களின் கருத்து. "வ்யவஸ்த்தாயா சைஷா நநு வரத ஸாவிஷ்க்ருதிவசாத்" என்று ஆழ்வான் அருளிச் செய்த கட்டளையில் ஆவிஷ்காரம் காணுமிடத்திலே ஸமந்வயம் ஸுகரமன்றோ? நம் ஆசார்யர்கள் ஸ்ரீஸூக்தி முகேந குணாநுபவம் பண்ணிற்றெல்லாம் விபவம் அர்ச்சை என்ற இரண்டு நிலைமைகளில் மாத்திரமேயாம். ஸ்ரீவைகுண்ட கத்ய, ஸ்ரீவைகுண்ட ஸ்தவாதிகளில் பரமபதாநுபவம் பண்ணியிருப்பது- அந்த தேச விசேஷத்தில் நிலைமைகளைப் பரக்க வருணித்திருப்பதும் பரமபத நாதனுடைய வடிவழகை யநுபவித்திருப்பதுமே. எம்பெருமானுடைய திவ்ய தேஹ குணங்களையும் திவ்யாத்ம குணங்களையும் கொள்ளை கொள்ளையாக அநுபவிப்பது விபவ அர்ச்சைகளிலேயே. அர்ச்சாவதாரத்தில் நம் போல்வாருடைய பாழுங் கண்ணுக்கு ஒன்றும் புலப்படாதாயினும் "பஜத்ப்யோ பாஸ்யேவம்" என்று ஆழ்வானருளிச் செய்த கட்டளையில் பரமபக்தர்களுக்கு அங்குள்ள திருக்குணங்களெல்லாம் கையிலங்கு கனியாகக் காணலாகின்றன. இக்குணம் "ஸ ஏகாகீ ந ரமேத" என்று பரமபத நாதனிடத்திலுமன்றோ பொலிவு பெறநின்றது!

இனி இரண்டாவது ஸந்தேஹத்திற்குப் பரிஹாரம் சொல்லுவோம். ஸர்வசக்தனை எம்பெருமானும் அசக்தனைப் போல் பாவனைகாட்டிச் செய்த ராம க்ருஷ்ணாதி யவதாரங்களில் இரண்டு வகையான துக்காநுபவங்கள் ஸ்ரீராமாயணாதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. (1) ஸ்வார்த்த துக்காநுபவம். (2) பரார்த்த துக்காநுபவம். பிராட்டியைப் பிரிந்த காலத்தில் வாசாமகோசரமாகப் பரிதபித்தமை கூறப்பட்டிருப்பதெல்லாம் உலகமறியும். அது ஸ்வார்த்த துக்காநுபவ கோடியிற் சேர்ந்தது. "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித:" என்று ஸாமாந்யமாகவும் "ஸஞ்ஜாதபாஷ்ப: பரவீரஹந்தா ராமோ முஹூர்த்தம் விமநா பபூவ" என்று விசேஷமாகவும் சொல்லப்பட்ட துக்காநுபவமானது பரார்த்த துக்காநுபவ கோடியில் சேர்ந்தது. இவ்விரண்டும் துக்காநுபவரூபமா யிருக்கச் செய்தேயும், தமக்கொரு கஷ்டம் நேர்ந்துவிட்டதென்று துக்கிப்பது மாத்திரமே அசக்தி பாவ

னையினுல் செய்த அபிநயரூபம். அதை குணமாக யாரும் எடுத்துக் காட்டுவதில்லை. *வ்யஸநேஷு மநுஷ்யாணுமித்யாதி ஸித்தமான துக்கமானது அசக்தி பாவனையினு லன்று, அபிநய ரூபமுமன்று. ஆகவேதான் இதைச் சிறந்த குணமாக எடுத்துக் காட்டுகிருர்கள். தேசிகனருளிச் செய்த அதிகரண ஸாராவளியில் *அந்தரதிகரணத் தின் முடிவு ச்லோகத்தில் "யத் து ஸ்வேச்சாவதாரேஷ்வபிநயதி ததபி *ஆஸுரோ பப்லவார்த்தம்" என்றவிடத்திற்கு வியாக்கியானம் எழுதியுள்ள ஸ்ரீமத் அஹோபி லம் ஸ்வாமி ['பதயோஜநா' என்னும் வியாக்கியானத்தில் "ஸ்வேச்சாக்ருதேஷு ராமக்ருஷ்ணுத்யவதாரேஷு *ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸோ நஷ்டா ஸீதா ஹதோ த்விஜ:, ஈத்ருசீயம் மமாலக்ஷ்மீ: நிர்தஹேதபி பாவகம்." இத்யாதிரீத்யா துஃக்கமபிநயதீதி யத் ததா து:க்கநடநமபி" என்று பணித்துள்ளார். இங்கு *ராஜ் யாத் ப்ரம்ச:* இத்யாதியான ஆரண்ய காண்ட ச்லோகத்தை துக்காபிநயத்திற்கு ப்ரமாணமாகக் காட்டினுரே யல்லது, *வ்யஸநேஷு மநுஷ்யாணுமித்யாதியான அயோத்யாகாண்ட ச்லோகத்தை ப்ரமாணமாகக் காட்டினுரல்லர். அது உண்மை யில் குணப்ரகரணத்திலுள்ளதாதலாலும், அபிநயரூபமன்ருதலாலும், ஸகல பூர் வாசார்யர்களும் பகவத் குணநிரூபணத்திற்கு அதைத் தலையான ப்ரமாணமாக எடுத்துக்காட்டுகிற படியாலும் அதற்கு யாதொரு கண்ணழிவும் சொல்லப் போகாது. ஆகவே, அசக்தனைப் போல் பாவனை காட்டின அவதாரத்திலுள்ள தெல்லாம் வேஷங்கட்டி ஆடினபடி யென்று சிலர் நினைப்பது தகாது. அப்படியா கில் "உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி" என்பதும் வெறும் வெளிவேஷ மேயாகும். கிம் பஹுநா? அவதாரங்களில் நடந்தவற்றில் ஒன்றையும் ப்ரமாணமாக வெடுத்துக் காட்டவே கூடாது. "குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்" என்ற ஸ்ரீஸூக்தியும் விப்ரலம்பகவாக்யமாகும். இதைப்பற்றி இன்னமும் வெகு விரிவாகச் சொல்ல வேண்டியதுண்டு. அதற்கு மற்ருெரு ஸமயம் ப்ராப்தமாகும். அபிநவ தயாசதகம் முதலிய வேறு நூல்களில் விவரித்துமிருக்கிருேம்.

இனி ஆநந்த மயத்வமும் கல்யாணகுணசாலித்வமும் பர்யாய மாகுமோ? என்கிற மூன்ருவது சங்கைக்குப் பரிஹாரம் சொல்லுகிருேம். "பச்சாச்சப்தோ நாஸ்திபர்யாய ஏவ" என்கிற முறையும் ஒன்றுண்டல்லவா? அந்த முறையே இங் குக் கொள்ளத் தக்கது. நிரங்குச ஸ்வதந்திரனை ஸர்வேச்வரனுக்கு உண்டான பாரதந்த்ர்யமானது விருத்தமன்று என்று சொன்னுல் இது எப்படி கூடும்? ஸ்வா தந்த்ர்யம் என்பது ஆனந்த ரூபம், பாரதந்த்ர்யம் என்பது துக்க ரூபம். இதில் விவாதப் பட நியாயமில்லை. ஸ்வதந்ரத்னுயிருந்து ஆனந்தப்படுகிற பகவான் பர தந்த்ரனுயிருந்து ஏன் துக்கப்படவேண்டும்? என்று கேட்டால் இதற்கு என்ன ஸமா தானம் தேறுகிறதென்று பார்க்கவேணும். "ஸர்வம் பரவசம் துக்கம்" என்றபடி பாரதந்ர்த்யம் துக்கரூபமேயானுலும் ஸ்வாதந்திரியமடியாக வுண்டான பாரதந்த்ர் யம் துக்கரூபமன்று என்று கூறவேண்டும். வஸ்துதோ துக்கமானது தானே ஹேது விசேஷத்தினுல் ஆனந்தமாக ஆய்விடுகிறதென்றும், வஸ்துதோ துக்கரூபமான அந்த பாரதந்த்ர்யத்தினுல் ஆநந்தமயத்வத்திற்கு ஹாநியில்லை யென்றும் சொல்லியாக வேண்டும். ஆனுல் நம்முடைய பர்யாயதாவாதம் இது கொண்டன்று. எம்பெரு மானுக்கு எத்தனையோ குணங்களிருக்க அவற்றையெல்லாம் விட்டு உபநிஷத்து

ஆனந்தத்தைப் பற்றிக்கொண்டு "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்பானேன்? என்று ஆலோசிக்க வேண்டும். உலகில் அளவுகடந்த ஆனந்தம் யார்க்கு உண்டாகும்? ஒன்றாலும் ஒரு குறையுமில்லாதவற்கே அது உண்டாகும். அதை *யுவா ஸ்யாத் **என்று தொடங்கி உபநிஷத்தே காட்டியிருக்கின்றது. ஏவஞ்ச, ஆநந்தமயத்வம் சொன்னதானது ஸகல கல்யாணமும் நிரம்பியிருக்கின்றமையைச் சொன்னதாயிற்று. ஆகவே, ஆநந்தமயத்வமும் கல்யாணகதாநத்வமும் பர்யாயமென்றதாயிற்று. இதை ஆழ்வானுடைய [ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில்] இரண்டு ச்லோகங்கள் மூதலிக்கின்றன.

"த்ரய்யுத்யதா தவ யுவத்வமுகைர்குணௌகை: ஆநந்தமேதிதமியாநிதி ஸந்நியந்தும், தே யே சதம் த்விதி பரம்பரயா ப்ரவ்ருத்தா நைவைஷ வாங்மனஸகோசர இத்யுதாஹ"

"ஏவம் தயா சதுரயா தவ யௌவநாத்யாஸ்ஸர்வே குணா: ஸஹ ஸமஸ்த விபூதிபிச்ச, ப்ரவ்யாஹ்ருதாஸ்ஸ்யுரவதீநவதீரயந்தோ வாசாமகோசர மஹாமஹிமாந ஏவ."

என்று. ஆனந்தமயத்வத்திற்கு எதிரானது ஹேய குணவத்த்வமே யல்லது வேறொன்று மாகாது. ப்ரக்ருதமான சோகம் ஹேய குணமன்றென்றும் கல்யாண குணமேயென்றும் ஸ்ரீராமாயணமே ஸ்பஷ்டமாகக் கூறியுள்ளதனால் நாம் சொன்னது ஸர்வம் ஸமஞ்ஜஸ மென்பது தெளிவன்றோ?

"அடியேன் மீது தயை பண்ணவேணும்" என்று பகவானை நோக்கியும் பாகவதர்களை நோக்கியும் பிரார்த்திக்கிறோம்; "பகவான் இன்னாருக்கு தயை பண்ணினன்" என்றும் சொல்லுகிறோமே; இவ்விடங்களில் தயை யென்பது பரது:க்க து:கித்வ ரூபமாகுமோ? 'எனக்கு தயை பண்ணவேணும்' என்றால் 'என் துக்கத்தைக் கண்டு நீயும் துக்கப்படவேணும்' என்பது பொருளன்றே; 'த்ரௌபதிக்கு தயை பண்ணினன் பகவான்' என்றால் அவளுடைய துக்கத்தைக் கண்டு துக்கித்தானென்பது பொருளன்றே. ஆகவே இவ்விடங்களில் தயாபதார்த்தம் வேறாகத் தானே யிருக்கவேண்டும். என்று சிலர் வாதிப்பர்கள். இவர்கட்குச் சொல்லுகிறோம். சாஸ்த்ரஜ்ஞர்களின் கொள்கைகளில் 'கார்யே காரணோபசாரம்' என்பதும் ஒன்று. அந்த முறையில் இங்கு நிர்வாஹம். 'என் திறத்தில் தயைபண்ணவேணும்' என்பதற்கு — என் துக்கத்தைக் கண்டு உண்டான துக்கத்தினால் என்னை ரக்ஷிக்கப் பார்க்க வேணும் என்பது பொருள். எவ்வெவ்விடங்களில் தயாபதமானது தன்னுடைய முக்ய சக்தி லப்யமான அர்த்தத்தில் [சோக ரூபமான பொருளில்] விச்ராந்தமாக மாட்டாதோ அவ்வவ்விடங்களில் கார்யே காரணோபசாரமென்று கொண்டு தத் கார்யமான ரக்ஷணம் வரையில் பொருளாகக் கடவது. தயா என்கிற வடசொல்லின் ஸ்தானத்திலேயே தமிழில் இரக்கமென்கிற சொல் உள்ளது. இரக்கமென்றாலும் சோகமென்றாலும் துக்கமென்றாலும் நிர்வேத மென்றாலும் பர்யாயமே. திருவாய்மொழியில் "என்றென்றே நைந்திரங்குமே" "இரங்கி நாடோறும் வாய் வெரீஇ" என வருமிடங்களில் சோகமே தான் பொருளாக வுரைக்கப் பட்டுள்ளது. "ஆவா வென்று அடியேற்கு இறை யிரங்காய்" "வாணனுக்கு இரங்கினனெம்மாயனே" என்னுமிடங்களில் தத்கார்யமான ரக்ஷணமே பொருளாக வுரைக்கப்பட்டுள்ளது.

(ச்லோ) மதுராந்தக வீரராகவாபித மித்ரப்ரவரஸ்ய ஸந்நிதௌ,
ப்ரணிபத்ய நிவேதயே மநாக் இதமேகம் க்ருபயா விலிக்ய்யதாம்.

தேவரீர் ஸ்ரீ பெரும்பூதூரில் அடியேனுடைய வினுக்களுக்கு ஆர்ஜவத்துடன் ப்ராமாணிகமாக விடை தந்தருளினதை உலகமெல்லாமுணர்ந்து மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியிருக்கின்றது. ரஹஸ்யத்ரயஸாரத்திலுள்ள "மத்யோபஹத பாத்ரஸ்த்த தீர்த்தத்ருஷ்டாந்தவர்ணநம், அஹங்காராந்வயே து ஸ்யாத் ப்ரபத்தாவபி பக்திவத்" என்று தேசிகனருளிய காரிகை ஒரு ஆசார்யருடைய ஸ்ரீஸூக்திக்குக் கண்டன மென்பது அபலபிக்க ஒண்ணுததன்றே? அந்த ஆசார்யர் யாவர்? என்பதை தேவரீர் விளக்கக் கூடுமா? இங்குச் சில வார்த்தைகளை தேவரீர் குறிக்கொள்ள விஜ்ஞாபிக்கிறேன். இந்த காரிகை தேசிகன் ஸாதித்ததன்று என்றும் இடையில் ப்ரக்ஷிப்தமானதென்றும் திண்ணமாகச் சொல்லுவேன். எதனுலென்ருல் திருக் குருகைப்பிரான் பிள்ளானுடைய ஸ்ரீஸூக்தியை தேசிகன் கண்டிக்கமாட்டா ரென்பது ஒரு காரணம். மற்ருெரு ப்ரபல காரணம் கேளீர்! திருக்குருகைப் பிரான் பிள்ளான் பணித்த வார்த்தையின் பொருளைச் சிறிதுமறியாமே இந்த காரிகை எழுதப்பட்டுள்ளது. ஊன்றிக் கேண்மின், "மத்யோபஹத பாத்ரஸ்த்த தீர்த்த த்ருடாந்த வர்ணநம்" என்றன்றே காரிகா சரீரமுள்ளது. மத்யோப ஹத என்கிற விசேஷணம் பாத்ரத்திற்கு இடப்பட்டுள்ளது, மத்யோபஹத பாத்ரம் எதுவென்ருல் கள்ளுச் சாலையில் வெகுகாலமாகப் பிளிச்ச நாற்றத்துடன் வைக்கப்பட்டுள்ள அவலக்ஷணமான மண் பாண்டமாகும். பிள்ளான் அதைச் சொல்லவில்லை. "சாதகும்பமய கும்பம்" ;என்கிருர். அதாவது ஸ்வர்ணபாத்ரம்; அது மத்யோபஹத பாத்ரமன்று. அந்த ஸ்வர்ண பாத்திரத்தில் கங்கா தீர்த்தம் வைக்கப்பட்டிருந்தது. அந்தத் தீர்த்தத்தில் மதிரா பிந்து ஸம்பந்தம் ஏற்பட்டு விட்டது. மதிரா ஸம்பந்த மேற்படவில்லை. மதிராபிந்து ஸம்பந்தமே ஏற்பட்ட தாக ஸாதித்து இதை த்ருஷ்டாந்தமாக்கி விஷயமருளிச் செய்யப்பட்டுள்ளது. அதாவது எவ்வளவு கழித்தாலும் கழிக்க வொண்ணுத ஸூக்ஷ்மாஹங்கார ஸம்பந் தம் ஏற்பட்டுவிடும் என்கை. இதை ஆர அமர உணர்ந்திருந்தால் "மத்யோபஹத பாத்ரஸ்த்த" என்று ச்லோகமிட நேராது. பின்னை எப்படியிடவேணுமென்ருல் "ஸ்வர்ண பாத்ரஸ்த ஸத்தீர்த்தம் மதிராபிந்து ஸம்யுதம், யதா—ததைவாஹங்கார மிச்ரோபாயாந்தரம் ஹதம்" என்று இட்டிருக்கவேணும். அதன்பிறகு "இத்யாச சக்ஷிரே பூர்வே ஸர்வதா தந்ந சோபநம்" என்று இட்டிருக்கவேணும். இப்போது காண்கிற அசட்டுக் காரிகை தேசிகனுடையதாகயிருக்க சிறிதும் நியாயமில்லை.

அன்றியும் "அஹங்காராந்வயே து ஸ்யாத்" என்கிற உத்தரார்த்தமும் அசடுவழிய நின்றது. கேண்மின்: "அவனை இவன் பற்றும் பற்று அஹங்கார கர்ப்பம், அவத்யகரம், அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்" என்று பிள்ளை லோகா சார்யரும், "கீழை மேலை வடக்கிலவை புறம்பாகத் தன் பற்று உள்ளசல்" (ஆசார்ய ஹ்ருதயே) என்று அவருடைய திருத்தம்பியாரும் அருளிச்செய்துள்ளவற்றை தேசிகனறியாதவரல்லர். அறிந்துவைத்து "அஹங்காரான்வயே து ஸ்யாத்" என் கைக்கு அவகாசலேசமுமில்லை. ஆக இந்த விஷயங்களை தேவரீர் தெளிய உணர்ந்

# மதுராந்தகம் ஸ்வாமிக்கு முக்யமான விண்ணப்பம்

ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் விவரண ஸாபேக்ஷங்களான ஐதிஹ்யங்களும் சொந்த வார்த்தைகளும் பல இருக்கின்றன. தேவரீர் அவற்றிற்கு விவரண மெழுதி வெளியிட்டால் லோகோபகாரமாகும். சிலவற்றைக் கீழே குறிப்பிடுகிறேன்:—

1. "அபிஷேகத்துக்கு நாளிட்ட ராஜகுமாரனுக்குச் சிறையிலே எடுத்துக் கை நீட்டின சேடிமார் பக்கலிலே கண்ணோட்டமுண்டாமாப் போலே"

2. "சார்வாகனுயிருப்பான் ஒரு ஸேவகன் ராஜாவின் உடம்பிலே சந்தனுதிகளைப் ப்ரயோகிக்க ராஜசரீரத்தில் ஆத்மா ப்ரீதனுமாப் போலே"

3. "தாதிமார் சொன்ன பாசுரத்தைச் சொல்லி ஸார்வ பௌமனைச் சரணம் புகும் முக்த்தரான ஸாமந்தகுமாரர்களைப் போலே"

4. "ஒரு மலையில் நின்றும் ஒரு மலையிலே தாவும் ஸிம்ஹ சரீரத்தில் ஜந்துக்களைப் போலே பாஷ்யகாரர் ஸம்ஸாரலங்கனம் பண்ண அவரோடு உண்டான குடல் துவக்காலே நாம் உத்தீர்ணராவுதோமென்று முதலியாண்டான் அருளிச் செய்த பாசுரம்."

5. "கலவெள்ளுக்கட்டுப் போய்க் கல எண்ணெயாயிற்று" என்று எம்பார் அருளிச் செய்தாரிறே"

6. "ஸர்வேச்வரனுடைய பரத்வமாத்ரத்தையறிந்து அகலுகையாலே நராதமனென்று பேர் பெற்ற பிறந்து கெட்டானிற்காட்டில் இடைச்சிகளைப் போலே விவேகமில்லையேயாகிலும் ஸௌலப்யத்தை அறிந்து அந்நலனுடையொருவனை நணுகுமவனே பரமாஸ்திகனென்று அப்புள்ளார் அருளிச் செய்யும் பாசுரம்."

7 "முறையொழியக் கேட்டுச் சொல்லுமாகில் காலன் கொண்டு ஆபரணம் பூண்டாற்போலே கண்டார் எல்லாரும் தன்னை அருவருக்கும்படியாம்"

8. "ப்ரவ்ருத்தி தர்மங்களிற்காட்டில் நிவ்ருத்தி தர்மங்கள் ச்ரேஷ்டங்களானாற் போலவும், அவை தம்மில் ஆத்ம விஷயமான யோகம் ச்ரேஷ்டமானாற் போலவும், ஆத்ம விஷய யோகங்களிற் காட்டில்......வஸுதேவ நந்தன விஷயமான யோகம் ச்ரேஷ்டமானாற் போலவும்"

9. "லோகத்திலும் தர்ம சீலனாய் உதாரனான ராஜாவுக்கு விலையாக ஏதேனுமொன்றைக் கொடுத்தால் பெறும் விலை கிடைக்கவும் அது தன்னையே உபஹாரபுத்தியாலே கொடுத்தால் வேண்டுவதெல்லாம் கிடைக்கவும் காணா நின்றோம்."

10. "இது பசித்து உண்பார் மாத்ரம்; இங்ஙனல்லாத போது ஓட்டத்துக்கு அப்பம் தின்பார் மாத்ரம்"

இங்ஙனே நூற்றுக்கணக்கான நல்வார்த்தைகள் ரஹஸ்யத்ரயஸாரத்தில் மலிந்துள்ளன. ஆங்காங்கு ப்ரவசனபரர்கள் (அதாவது) "தத்ரைகச்சிஷ்யதாம் கத:" என்றாப் போலே ஒருவனையோ சிலரையோ சிஷ்யஸ்தானத்தில் வைத்து ஆசார்யகம் பண்ணுமவர்கள் திண்டாடுகிற திண்டாட்டம் தீர இவற்றுக்கெல்லாம் விவரணமெழுதி வைத்தால் அவர்களுக்கு மஹோபகாரமாகும்.

தால் *மத்யோபஹதேத்யாதிகாரிகை தேசிகன் ஸாதித்ததன்று தான் என்று கையெழுத்திட்டேதீரும். ஆனால் இவ்வளவு ப்ரமாணிகத்வம் சடக்கென விளங்திடுமென்று அடியேனுக்குத் தோன்றவில்லை. தேசிகனுடைய காரிகையாகவே வைத்துக்கொண்டு இது யாருடைய ஸ்ரீஸூக்திக்குக் கண்டனமென்பதை மட்டும் ந்ருஸிம்ஹப்ரியா மூலமாகவே விளக்கியருளவேணும்.

---

# போலிவைணவரின் பொய்யுரை மறுப்பு

(முன் தொடர்ச்சி)

“மாநாதீநா மேயஸித்தி:” என்பர் சாஸ்த்ரஜ்ஞர்கள். ப்ரமாணாதீநா ப்ரமேயஸித்தி:—என்றபடி. ஒரு ப்ரமேயத்தை ஸாதிக்கவேணுமானாலும் கண்டிக்கவேணுமானாலும் ப்ரபல ப்ரமாணம் கொண்டே என்பது புதிதாக நாம் சொல்லுவதன்று. பகவத் கீதையில், “த்வௌ பூதஸர்கௌ லோகேஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச” என்று வகுக்கப்பட்ட இரு பகுதிகளில் தைவப்ரக்ருதிகளாய் உள்ளவர்களையே ஆஸ்திகர்களென்கிறோம்; ஆஸுர ப்ரக்ருதிகளை நாஸ்திகர்களென்கிறோம். ஸ்ரீவசன பூஷணத்தில் “கேவல நாஸ்திகனைத் திருத்தலாம்; ஆஸ்திகநாஸ்திகனை ஒரு நாளும் திருத்தவொண்ணாது” என்றார் பிள்ளைலோகாசார்யர். அவரினும் முற்பட்ட பர்த்ருஹரிகவி “அஜ்ஞஸ்ஸுகமாராத்ய: ஸுகதரமாராத்யதே விசேஷஜ்ஞ:, ஜ்ஞாநலவதுர்விதக்த்தம் ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி.” என்றார். திருமழிசைப்பிரான் தமது திருவந்தாதியில் எம்பெருமானுக்கு மற்று யாருமிடாதவொரு விசேஷணமிடுகிறார், “நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்” என்று. நூலாட்டி கேள்வனார் என்றது ச்ரியப்பதி என்றபடி. நூல்வலையில் பட்டிருந்த என்றது சாஸ்த்ரவரம்புக்குக் கட்டுப்பட்டவன் என்றபடி. “ச்ருதி: ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா” என்று தானே சொன்னபடி தன்னுடைய ஆஜ்ஞையான சாஸ்த்ரங்களுக்குத் தானும் கட்டுப்பட்டிருக்கிறான் அவன். உலகத்திலுள்ள நாநாமதங்களை விட்டுவிடுவோம். ஸ்ரீவைஷ்ணவமதஸ்தர்களை மட்டும் கொள்வோம். ஆளவந்தார், ஸ்ரீராமாநுஜர், கூரத்தாழ்வான், பட்டர் என்னுமாசார்யர்களின் ஸ்ரீஸூக்தியை யெடுத்துக் காட்டினால் கை கூப்பாத ஸ்ரீவைஷ்ணவர்களில்லை. “ஆளவந்தார் ஸாதித்தாலென்ன? உடையவர் சொன்னாலென்ன?” என்கிற ஸ்ரீவைஷ்ணவர் இது வரைக்கும் உதிக்கவில்லை. பட்டர்க்குக் கீழ்பட்ட ஆசார்யர்களில் தேசிகன் ஸ்ரீஸூக்தியென்றால் விசேஷ ஆதரம் காட்டும் வகுப்பினரும், பிள்ளைலோகாசார்யர், மணவாளமாமுனிகள் ஸ்ரீஸூக்தியென்றால் அப்படியே ஆதரிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களும் உலகில் பரவியுள்ளார்கள். ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும் த்ருணீகரிக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களை இதுகாறும் நாம் கண்டதில்லை. கண்டால் “நீ யவர்பால் சென்றணுகக் கூசித்திரி” என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரத்தை யநுஸந்தித்து கடக்க நிற்பதே உண்மை ஸ்ரீவைஷ்ணவர்களின் கடமையாகும்.

நம்முடைய வாழ்நாளில்; இதுகாறும் பலபல துர்வாதங்களுக்கு கண்டநங்களெழுதி மாதப் பத்ரிகைகளிலும் தனிப் புத்தகங்களும் வெளியிட்டுள்ளோம். அவரவர்கள் நாம் காட்டும் ப்ரமாணங்களுக்கு இசைந்து கைகூப்பித் திருந்தியுள்ளார்கள். சிலவற்றை இங்கு நினைவூட்டுகிறோம். திருமழிசைப்பிரானுடைய காலம் நம்முடைய புத்திக்கு எட்டாதது. அவர் கச்சி வெஃகாவில் (காஞ்சீபுரம் ஸ்ரீயதோக்தகாரி பெருமாள் ஸன்னதியில்) வாழ்ந்ததாகவும், ஓர் அரசனுடைய கொடுங்கோன்மையினால் கச்சிப்பதியை விட்டு விலக நேர்ந்ததாகவும் அப்பொழுது சேஷசாயியான பெருமாளேயும் எழுந்தருளிப்பண்ணிக்கொண்டு போய், பிறகு அவ்வரசனது வேண்டுகோளினால் மீளவும் வந்து அப்பெருமானை ஸன்னிதிக்குக் கொண்டு சேர்ப்பித்ததாகவும் இதிஹாஸமுள்ளது. இதை ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அஸம்பாவிதமென்று அறுபது வருஷங்களுக்கு முன்பு எழுதினார். அவருக்கு வேதாந்த தேசிகன் ஸாதித்த யதோக்தகாரிஸ்தோத்ரத்தில் உள்ள "ப்ரத்யாதிசந்தி பவஸஞ்சரணம் ஜநாநாம் பக்தாநுகந்துரிஹ யஸ்ய கதாகதானி" இத்யாதி ச்லோகங்களையெடுத்துக்காட்டி நாம் தெளிவு பெறவித்த பின்பு அவர் திருந்தி மிக்க அநுதாபத்தை வெளியிட்டார். இவர் அவ்வளவு விசேஷஜ்ஞரல்லர். மஹாவிவேகியாயும் உந்நதபதவிகளில் வாழ்ந்தவராகவும் ப்ரஸித்தி பெற்றிருந்த திருவள்ளூர் திவான் பஹாதூர். T.T. ரங்காசாரியர் (தற்சமயம் ப்ரஸித்தராய் விளங்கும் T.T. க்ருஷ்ணமாசாரியின் திருத்தகப்பனார்) அஹோபிலமடத்துப் பத்ரிகையில் திருமங்கையாழ்வார் சரித்திர ஆராய்ச்சி என்று மகுடமிட்டு "இவ்வாழ்வார் ஸ்வர்ணமயமான ஜைன விக்ரஹங்களைக்களவாடிக்கொணர்ந்து ஸ்ரீரங்கத்தில் ப்ராகார கோபுராதிகளைக்கட்டுவித்தார் என்கிற ஐதிஹ்யம் மிகத்தவறு, மிகப்பொய்யானது; ஆழ்வாரின் கௌரவத்தைக் கெடுக்குமது—என்று மனம்போனபடியும் கைபோனபடியுமெல்லாம் எழுதி வெளியிட்டிருந்தார். அப்போது இருபத்திரண்டாவது வயதிலிருந்த நாம், "ஜிதபாஹ்யஜிநாதி மணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டபவப்ரகணாந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தான்." என்கிற பட்டருடைய ஸ்ரீ ரங்கராஜஸ்தவ ச்லோகத்தை யவர்க்கு எழுதியனுப்பி, "இப்படிப்பட்ட ச்லோகம் உம்மால் எழுதமுடியுமா? வேறு எந்த பண்டிதராலாவது எழுதமுடியுமா?" என்று கேட்டிருந்தோம். அதைக் கண்ட அவர் உடனே காஞ்சீபுரம் ஓடிவந்து தேவப்பெருமான் ஸன்னிதியில் என்னைச் சந்தித்து தம்முடைய தவறுக்கு அனுதயித்தபடியை கண்டவர்கள் இற்றைக்கு முள்ளார்கள். அவ்வநுதாபத்தை அவர் பத்ரிகையிலும் வெளியிட்டிருந்தார். மற்றுமொன்று கேளீர். உடையவருடைய சரித்திரத்தில் அவர் தினப்படியாக சாலக்கிணற்றிலிருந்து தேவப் பெருமாளுக்கு தீர்த்தம் கொண்டு ஸமர்ப்பித்த ஐதிஹ்யத்தை தூஷிக்கப் புகுந்த ஒருவர், "சதுச்சாஸ்த்ர பண்டித்ரான அவர் ஸாமான்ய ஜனங்களைப் போலே தண்ணீர் குடத்தை தினமும் தலைமேல் தூக்கிக் கொண்டு வந்தார் என்பது ஹேயம், மிகவும் அஸங்கதம்" என்று பலவாறாக எழுதிக்கொண்டும் பேசிக்கொண்டுமிருந்தார். ஆனால் அவர் மிகவும் ஆஸ்திகரே, நாஸ்திகரல்லர். அரசாணிபாலை வேங்கடாத்த்வரி, "விதுஷாமபி மோஹமாவஹந்தோ விததைதிஹ்யஸஹஸ்ரவர்ணநேந" என்றெழுதிவைத்த ச்லோகத்தில் விச்வாஸத்தினால் இப்படியொரு துஷ்ப்ரசாரம் செய்ய வாரம்பித்தார் அவர். அவர் தேசிகபக்தராயும் தேசிகஸூக்திப்ரவணராயுமிருந்தபடியால், யதிராஜஸப்ததியிலுள்ள, "தத்தம்

யேந தயாஸுதாம்பு நிதிநா பீத்வா விசுத்தம் பய: காலே நா: கரிசைலக்ருஷ்ண ஜலத: காங்க்ஷாதிகம் வர்ஷதி, வந்தே தம் யமிநாம் துரந்தரமஹம்'' என்கிற ச்லோகத்தை நாம் எடுத்துக் காட்டின வாறே மிக அனுபவித்துத் திருந்தினர். இது தோளுங்குளம் ராமாநுஜாசார்யரென்பவர் தேவப்பெருமாள் ஸந்நிதிக்கு ரிஸீவராயிருந்த காலத்தில் அவர் முன்னிலையில் நடந்ததென்பதை பலரறிவர்.

கடைசியாக ஒரே விஷயத்தைச் சொல்லி இதைத் தலைக்கட்டுகிறோம். ஆழ்வார்களின் கால ஆராய்ச்சிக்காரர்களான நவீநர்கள் மனம் போனபடி எழுதி வைத்திருக்கிற புத்தகங்களைக் கண்ட ஆஸ்திக ஸ்ரீவைஷ்ணவர்களும் நிலைகலங்கி "நம்மாழ்வாரும் நவீநகாலத்தவரே யொழிய புராதனரல்லர்" என்று ப்ரசாரம் செய்துகொண்டிருந்த காலத்தில் தேசிகன் ஸம்ப்ரதாய பரிசுத்தியின் தொடக்கத்தில், "இந்த யுகாரம்பத்திலே ப்ரஹ்மநந்த்யாதிகளுக்குப் பிறகு நம்மாழ்வார் ஸித்தாந்தப்ரவர்த்தகராளுர்" என்று ஸாதித்திருப்பதை நாம் எடுத்துக் காட்டிய பின்பு தெளிவுற்றார்கள். இவ்வளவோடும் நில்லாமல் நாதமுனிகளுக்கும் நம்மாழ்வாருக்கும் யாதொரு ஸம்பந்தமும் இருந்ததில்லையென்றும் ஸ்ரீராமாநுஜர்க்கும் திவ்யப்பிரபந்தங்களுக்கும் எவ்விதமான ஸம்பந்தமும் இருந்ததில்லையென்றும் இவ்வாறு பல துர்வாதங்களைச் செய்துகொண்டிருந்தார்கள் பல ஸ்ரீவைஷ்ணவர்கள். அவைஷ்ணவர்கள் இப்படி வாதித்தால் அதை நாம் பொருள் படுத்தவே மாட்டோம். ஸ்ரீவைஷ்ணவர்களே எழுதியும் சொல்லியும் வந்த படியால், மற்றை ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளை விட்டு தேசிக திவ்யஸூக்திகளையே முக்கியமாக எடுத்துக் காட்டினோம். தேசிகன் தம் குருபரம்பராஸாரத்தில், "இவர்க்கு...யோகதசையில் ஸாக்ஷாத்க்ருதராயும் நம்மாழ்வார் ஆசார்யராளுர்" என்றும், "ஸ்ரீபாஷ்யகாரர் திருமாலையாண்டான் பக்கலில் திருவாய்மொழி கேட்டார்" என்றும் எழுதிவைத்த ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக்காட்டின பிறகு பலர் அநுபவித்தும் திருந்தியும் போனார்கள். ப்ரக்ருதம் போலி வைணவரென்று நாம் குறிப்பிடும் வ்யக்தி எந்த வகுப்பில் சேர்ந்தவரோ அறியோம். இவர் தாமே 20 வருஷங்களுக்கு முன்பு ஸ்ரீராமாநுஜருக்கும் திவ்யப்ரபந்தங்களுக்கும் எவ்வித ஸம்பந்தமும் இருந்ததில்லையென்று எழுதி அச்சிட்டிருந்த போது இவரையும் உலகத்தையும் தெளிவிப்பதற்காக நாம் "த்ரமிடோபநிஷத்ப்ரபாவஸர்வஸ்வம்" என்கிற நூலை எழுதி வெளியிட்டோம். அப்போது இவருடைய பித்ருவ்யரான வித்வான் கோபாலதேசிகாசார்ய ஸ்வாமி அதைப்பூர்த்தியாகக் கடாக்ஷித்து நமக்கெழுதியிருந்த கடிதத்தை ஏற்கெனவே வெளியிட்டிருக்கிறோம். அவர் திவ்யப்ரபந்தமோதாவிடினும் ஆழ்வார்களிடத்திலும் அருளிச்செயலிடத்திலும் பரமப்ராவண்யமுடையவராயிருந்தார். "இவ்வசட்டு வாதம் மேலும் தொடராதபடி அடியேன் பார்த்துக்கொள்ளுகிறேன். தேவரீர் க்ருபையுடன் சாந்தியடைய வேணும்" என்று அவர் எழுதியிருந்தார். இப்பொழுது அதனிலும் விஞ்சிய பல துர்வாதங்கள் தலைவிரித்தாடுகின்றன. இவரை நோக்கி முன்னிதழில் நாம் "ஆர்ஷக்ரந்தங்களில் எதெதை ப்ரமாணமாகக்கொள்ளுகிறீர்? ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கியுள்ள ஆசார்யர்களில் எந்தெந்த ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளை ப்ரமாணமாக இசைகின்றீர்?" என்று கேட்டிருக்கின்றோம். ஆகமப்ராமாண்யம் ஆளவந்தார் ஸாதித்ததன்று; கத்யத்ரயம் ராமாநுஜர்

ஸாதித்ததன்று'' என்று மனம்போனபடியெல்லாம் எழுதிவைத்திருக்கிற விவரைப் பொருள் படுத்தி நாம் எழுதுவது தகுமா? ஒருப்ரமாணத்திற்கும் கட்டுப்படாதவரை எந்த ப்ரமாணம் கொண்டு திருத்துவது? சில ஸ்ரீஸூக்திகளை தமது துர்வாதத்திற்கு ப்ரமாணமாக காட்டுகிறார். ஒரு வேடிக்கை பாருங்கள். திருப்பல்லாண்டில் "தீயிற்பொலிகின்றசெஞ்சுடராழிதிகழ்திருச்சக்கரத்தின் கோயிற் பொறியாலே யொற்றுண்டு நின்று குடிகுடி யாட்செய்கின்றோம்,, என்கிற பாசுரத்தைக்கொண்டு கோயிலிலுள்ள பூஜாரிகள் செய்து கொண்டிருந்த காரியமிது —என்று கூசாது எழுதிவைக்கிறார். இப்பாசுரம் ஸாதித்த பெரியாழ்வார் தாமே "என்னையுமென்றுடைமையையும் உன் சக்கரப் பொறியொற்றிக் கொண்டு'' என்று தமது திவ்யப்ரபந்த முடிவில் ஸாதித்துள்ளார். அங்கு இவர் அபார்த்தம் தலைகாட்ட வழியில்லை. தீயிற்பொலிகின்ற பாசுரத்தின் தத்வம் கேளீர்— பெரியாழ்வார் திருப்பல்லாண்டு தொடக்கத்தில் "எங்கள் குழுவினில் புகுதலொட்டோம்'' என்றும், ''எங்கள் குழாம் புகுந்து கூடுமனமுடையீர்கள் வரம்பொழி வந்தொல்லைக் கூடுமினோ'' என்றும் அருளிச் செய்ததைக் கேட்டவர்கள் ஆழ்வார் கோஷ்டிக்கு எதனால் வைலக்ஷண்யம் என்பதை விசாரித்து "திருவிலச்சினை'' என்று வழங்கப்படுகிற சக்ராங்கனத்தினால், (தப்தமுத்ராதாரணத்தினால்) என்றறிந்து உடனே தாங்கள் அவ்விலச்சினை பெற்று ஆழ்வார் கோஷ்டியிலே வந்து புகுந்து பல்லாண்டு பாடுவதாக அமைக்கப்பட்ட பாசுரமது. அதில் கோயில்" என்றது ஆலயத்தையன்று; திருச்சக்கரத்தின் கோயில் என்றது ஆசார்ய புருஷர்கள் பரம்பரயா வைத்துக் கொண்டிருக்கிற சக்ராங்கனக் கருவியே யாகும். சக்கரத்தைச் சொன்னது சங்கத்திற்கு முபலக்ஷணம். த்வஜதிகள் பஞ்சாயுதங்களையும் கொண்டு தப்தமுத்ராதாரணம் செய்வித்துக் கொள்ளுகிறார்கள். அதுவும் ஸக்ருத்தன்று அஸக்ருத். இதை மதாந்தரஸ்த்தர்கள் ஏசுவதுண்டு. ஸ்ரீவைஷ்ணவ குலத்தில் பிறந்து அபார்த்தங்கள் செய்வது பற்றி என் சொல்வோம். ஸுதர்சனமீமாம்ஸா, ஸச்சரித்ரரக்ஷா,ஸுதர்சனஸுரத்ருமம், முதலான பல க்ரந்தங்களால் ஸ்தாபிக்கப் பட்ட இவ்விஷயத்தில் விப்ரதிபத்தி பண்ணுவது எந்த வினையின் பயனோ?

உலகில் வெட்டவெளிச்சமாகவே நாஸ்திக வாதம் செய்பவர்களை எங்கும் காண்கிறோம். அன்னவர்களின் வேஷபாஷைகள் இருக்கும் படியையும் கண்டு வருகிறோம். இப்போலி வைணவரும் அப்படியே யிருந்துவிட்டால் விசாரமில்லை. பட்டர் ஸஹஸ்ர நாமபாஷ்யத்தில் ஓரிடத்தில் ஆச்சரியமாக ஒரு ஸ்ரீஸூக்தி ஸாதித்துள்ளார். (அதாவது) "ந தே நிரஸநீயா:, அபிது சோசனீயா:" என்பது இதன் பொருள் என்னவென்றால், (தத்வத்தை மனமார அறிந்து வைத்தும் துர்வாதம் செய்பவர்கள் கண்டிக்கத்தக்கவரல்லர், ஐயோ! இவர்களின் தலைவிதி இப்படியாயிற்றே! என்று அழுது முடிக்கவேண்டியதத்தனை—என்பதாம். இந்த ஸ்ரீஸூக்தியை முதன் முதலாக உலகுக்கு எடுத்துக் காட்டியது நாமே. இப்போது இந்த ஸ்ரீஸூக்தியைப் பலர் நமக்கு நினைவூட்டி "எதற்காக இந்த சுஷ்க கண்டனப்ரவ்ருத்தி?'' என்று கேட்டு வருகிறார்கள்.

தொடரும்

## 79. ஒப்பிலியப்பன் ஸன்னிதி

திருக்குடந்தையருகில் திருவிண்ணகர் என்ற திவ்யதேசம் உள்ளது. இத்தலத்திற்கு நம்மாழ்வார் ஒரு பதிகமும் திருமங்கையாழ்வார் மூன்று பதிகங்களும் பாடியுள்ளார்கள். இத்தலத்தை 'உப்பிலியப்பன் ஸன்னிதி' என்று வழங்கிவருகிறார்கள். இங்கு ஸன்னிதியில் உப்பின் சம்பந்தமே கிடையாது. எந்தப்பண்டமும் உப்பு இல்லாமலே தளிகையாகும். இத்தலத்து எம்பெருமான் விவாஹம் செய்து கொள்ள விரும்பி மானிட வேடம் பூண்டு பெண்படைத்த ஒரு வைணவர் திருமாளிகையிற் சென்று ''உம்முடைய கன்னிகையை எனக்குத் தாரைவார்த்துத்தர வேணும்'' என்று வேண்டினர். அதற்கு அவர் ''என் பெண்ணுக்கு உப்பு போட்டுக் கூட தளிகை பண்ணத் தெரியாதே'' என்ன ''எனக்கு உப்பில்லாத பிரசாதம் தான் ருசிக்கும்'' என்று சொல்லி அப்பெண்ணை மணம் புணர்ந்து கொண்டு வந்துவிட்டார். அதற்காகவே உப்பில்லாத ப்ரஸாதங்களை அமுது செய்து வருகிறார்.—இது புராண வரலாறு. ஆழ்வார்கள் பாசுரத்தின்படி உப்பிலியப்பன் அன்று 'ஒப்பிலி அப்பன்' என்றே. நம்மாழ்வார் *நல்குரவும் செல்வும் என்ற பதிகத்தில் ஒன்பதாம் பாட்டில் ''தன்னொப்பாரில்லப்பன் தந்தனன் தனதாள்நிழலே'' என்றருளிச்செய்தார். திருமங்கையாழ்வாரும் திருக்கண்ணபுரப்பதிகத்தில் சௌரிப் பெருமாளைத் திருவிண்ணகர்ப் பெருமாளாக அனுபவித்துப் பேசும் பாசுரத்தில் ''ஒருவரையும் நின்னொப்பார் ஒப்பிலா வென்னப்பா வெனகின்றாளால்'' என்றருளிச் செய்தார். தன்னோடொத்த தெய்வம் இல்லாதவர் என்றபடி. இத்தலத்திற்குத் திலதமாக விளங்குமவரும் விவேகி வித்வத் ஸார்வ பௌமருமான ஸ்ரீமதுபயவே. நவநீதம் ஸ்ரீராம தேசிகாசார்யர் நம்மோடு நட்பு கொண்ட நாள் முதலாக 'ஒப்பிலியப்பன் ஸன்னிதி' யென்றே எழுதியும் பதிப்பித்தும் வருகிறார்.

## 80. ஓ ஓ உலகினதியல்வே!

நம்மாழ்வார் அருளிய திருவாசிரியத்தில் ஆறுவது பாட்டின் முதலடி இது. ஸம்ஸாரிகளாயுள்ள நமக்குப் பொறுக்க முடியாத துக்கம் உண்டானால் ஐயோ! ஐயோ!'' என்று கதறுகிறோம். ஆழ்வாரும் ஒரு துக்கத்திற்காக ஓ! ஓ!! என்று கதறுகிறார். ஆழ்வார்க்கு என்ன துக்கம் என்னில் இப்பாட்டை முழுதும் கேட்டால் அது தெரியவரும். ஓ ஓ உலகினதியல்வே, ஈன்றோளிருக்க மணைநீராட்டி படைத்திடந் துண்டுமிழ்ந்தளந்து தேர்ந்துலகளிக்கும் முதற் பெருங்கடவுள் நிற்ப புடைப்பல தானறி தெய்வம் பேணுதல் தனது புல்லறிவாண்மை பொருந்தக் காட்டி கொல்வன முதலா அல்லன முயலும் இனைய செய்கை இன்பு துன்பளி தொன்மாமாயப் பிறவியுள் நீங்கா பன்மாமாயத் தழுந்துமா நளிர்ந்தே'' என்பது திருவாசிரியத்தில் ஆறும் பாசுரம். (இப்பாட்டின் சுருக்கமான கருத்து) ''ஸகலவிதத்திலும் மஹோபகாரகனான ஸ்ரீமன் நாராயணன் இருக்க அவனைவிட்டு க்ஷுத்ர தெய்வங்களைப் பணிவதே! ஒரு திருத்துழாயினால் திருப்தியடையும் எம்பெருமானைப் போலன்றிக்கே 'ஆடு பலிகொடு' 'கோழி பலி கொடு' என்கிற தெய்வங்களைப் பணிவதே! பணிந்து பெறும் பேறும் அற்பமாயிரா நின்றதே! இவையென்ன உலகியற்கை!'' என்று வருந்துகிறார் ஆழ்வார். திருச்சந்த விருத்தத்தில் ''காணிலுமுருப் பொலார் செவிக்கினாத கீர்த்தியார் பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவரை ஆண மென்றடைந்து வாழும் ஆதர்காளெம்மாதி பால் பேணி நும் பிறப்பெனும் பிணக்கறுக்க கிற்றிரே'' என்கிற பாசுரத்தையும் இங்கே கூட்டிக் கொள்வது. திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் (11-6) *மைந்நின்ற கருங்கடல் வாயுலகின்றி* என்று தொடங்கும் பதிகம் இத்திருவாசிரியப் பாசுரத்தை விவரித்ததாகும்.

## 81. ஓதுவாய்மையும் உவனியப்பிறப்பும்

பெரியதிருமொழியில் (5–8-7)உஜ்ஜயினியில் வாழ்ந்த ஸாந்தீபினி முனிவனுக்கு அருள்செய்தவாற்றைப் பேசும் பாசுரத்தின் பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானத்தில் ப்ராஸங்கிகமாக நம்பிள்ளையைப் பற்றி அருளிச் செய்த வார்த்தை காணீர். (அதாவது) ''முன்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸ புராணங்களையுமதிகரித்து பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக் குடலாக ந்யாய மீமாம்ஸைகளுமதிகரித்து போதுபோக்கும் அருளிச் செயலிலேயாம் நம்பிள்ளையைப் போலே அதிகரிப்பிக்க வல்லவனையிறே 'ஒருவன்' என்பது.''—என்று

## 82. ஓதமாகடலைக் கடந்தேறி

பெரிய திருமொழியில் (10-2-6) ஸ்ரீராமவிஜயத்தை அரக்கர் பேசும் பேச்சாலே தெரிவித்த பதிகத்திலுள்ள பாசுரமிது. இதில் அனுமனுடைய சரிதை முழுவதும் சுருக்கமாக ஓதப்பட்டு முடிந்தது. உலகில் ஸ்ரீராமாயண பாராயணம் செய்பவர்கள் பாராயணத் தொடக்கத்தில் அநுமனைப் பற்றிய க்ருதிகள் பல சொல்லி வருகிறார்கள். அவற்றுள் ''உல்லங்ய ஸிந்தோஸ் ஸலிலம் ஸலீலம் யச் சோகவஹ்நிம் ஜநகாத்மஜாயா: ஆதாய தேநைவ ததாஹ லங்காம் நமாமி தம் ப்ராஞ்ஜலிராஞ்ஜநேயம்'' என்பதொரு ச்லோகம். அது தன்னில் கடலைக் கடந்ததும் இலங்கையை யெரித்ததுமாகிய இரண்டு சரிதையே சொல்லப்பட்டது. இப்பாசுரம் கேளீர். ''ஓதமாகடலைக் கடந்தேறி உயர்கொள்மாக் கடிகாவையிறுத்துக் காதல் மக்களும் சுற்றமும் கொன்று கடியிலங்கை மலங்க வெரித்துத் தூதுவந்த குரங்குக்கே உங்கள் தோன்றல்தேவியை விட்டுக் கொடாதே ஆதர் நின்று படுகின்றதந்தோ அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ''.

## 83. "ஓவாதுரைக்கு முரையுண்டே"

பொய்கையாழ்வாருடைய திருவந்தாதியில் (95) உள்ள பாசுரமிது. ''நாவாயிலுண்டே நமோ நாரணவென்று ஓவாதுரைக்கு முரையுண்டே மூவாத மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே என்னொருவர் தீக்கதிக்கண் செல்லும் திறம்'' என்பது பாசுரம். ஸஹஸ்ராக்ஷரீமாலா மந்த்ரத்தைச் சொல்லவேணுமானால் இடையில் மூச்சு விடவும் முடியாதே நெடுமூச்சுக்கொண்டு, ஓய்ந்து ஓய்ந்து சொல்லவேண்டிய அருமையுண்டு; திருவஷ்டாக்ஷரம் அப்படியன்று. இடையில் ஓய்வை அபேக்ஷியாமல் ஒரு காலே சொல்லி இளைப்பாறலாம் படியான மந்த்ரமிது. இவ்வளவு சுலபமான மந்த்ரம் கைப்பட்டிருக்கவும் அந்தோ சிலர் இழக்கிறார்களே! என்ன கொடுமை! என்று உருகுகிறார் ஆழ்வார்.

## 84. ஔவையார் வியந்துகந்த வார்த்தையொன்று

ஔவையார் காலால்நடந்து தலயாத்திரை செய்கிறாள். சீர்காழிக்கருகே நாவல் தோப்பில் புகுந்துபோகின்றாள். அங்குள்ள பயல்கள் மரத்தின் மீதேறி நாவற்பழங்கள் பறித்துத் தின்பதைக் கண்ட ஔவையார் 'பயல்களே! எனக்குப்பசியும் தாகமுமாக இருக்கிறது. கொஞ்சம் பழங்கள் பறித்துப் போடுங்கள்' என்றாள். அதுகேட்ட பயல்கள் 'பாட்டி! சூடானபழம் வேண்டுமா? குளிர்ச்சியான பழம் வேணுமா' என்ன; ஔவையார் 'உங்களுக்குக் கொழுப்பா, என்னிடமா நீங்கள் பரிகாசம் வைத்துக் கொள்வது?' என்றாள். உடனே பயல்கள் நன்றாக அளிந்திருந்த பழங்களைக் குலுக்கினார்கள். அவை மண்ணில் வீழ்ந்தபடியினாலே ஔவையார் மண்பற்றைக் கழிப்பதற்காக ஊதினாள். ''பாட்டி! சுடுகிறதல்லவா? நன்றாக ஊதும்'' என்று பயல்கள் சொல்லி ஔவையாருக்கு பயல்களின் வார்த்தையில் மிக்க வியப்பு உண்டாயிற்று. அளிந்தபழம் வேணுமா என்பதற்குப் பரியாயமாக சூடான பழம் வேணுமா என்று கேட்டதாக அறிந்து கொண்டாள். பயல்களுக்கு ஆசிகூறிச் சென்றாள்.

# உள்ளூர் ஷஷ்ட்யப்தபூர்த்தி விசேஷமிரண்டு

1. ஸ்ரீமான் உ. வே. திருமலை விஞ்சிமூர் திருவேங்கடாசாரியருக்கு ஷஷ்ட்யப்தபூர்த்தி 4—7—73 மஹோத்ஸவம் புதன்கிழமை காஞ்சீபுரியில் நடைபெற்றது. இவர் ஸாஹித்யத்திலும் பாஞ்சராத்ராகமத்திலும் நிபுணர். பலவாண்டுகள் பம்பாய் பநஸவாடி திருவேங்கடமுடையான் ஸன்னிதியில் அர்ச்சகராயிருந்து தற்சமயம் இவ்வூர்ப் பவழவண்ணர் ஸன்னிதியில் அர்ச்சகராக இருக்கிறார்.

இந்த விசேஷ வைபவக் காட்சியே புகைப்படத்தில் விளங்குவது.



2. ஸ்ரீமான் உ. வே. கோயில் கந்தாடை அண்ணன் (ஜடப்ரோல்) சின்ன சிங்கராசாரியர்க்கு (3—10—73) புதன்கிழமை திருமூலத்தன்று காஞ்சீபுரியில் அவரது திருமாளிகையில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் நடைபெற்றது. இவர் கீர்த்திமூர்த்தியான கோ. க. திருவேங்கடாசார்யஸ்வாமியின் திருக்குமாரர். தேவப்பெருமாள் ஸன்னிதி அத்யாபக கைங்கர்ய நிஷ்ணாதர். ''வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழ!''

பத்ராதிபர்

# புத்தக வெளியீடுகள்

1. ப்ரமாதீச வருஷ ஆனித்திருமூலத்தின் (ஈடு மஹோத்ஸவத்தின்) நினைவு மலராக மணவாள மாமுனிகள் வைபவம் நம் ஸ்வாமியால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. விலை ரூபாய் ஒன்று மட்டும்.

2. அபூர்வார்த்த ரத்னநிதி (முதல் ரத்னம்) P. B. A. ஸ்வாமி தமது எண்பத்திரண்டு திருநக்ஷத்ர பூர்த்தியின் நினைவு மலராக அளித்துவரும் ''அபூர்வார்த்த ரத்னநிதி''யில் உயிரெழுத்து வரிசையில் எண்பத்து நான்கு அபூர்வார்த்தங்கள் தனிப் புத்தகமாகக் கிடைக்கும். விலை ரூபாய் ஒன்று.

தி. அ. அனந்தாழ்வான்

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரணை நூல்கள்.
10. லோகாபிராம உபந்யாஸ நூல்கள்
11. பரபக்ஷ ப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடு
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தி பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

SRI T. A. ANANTHALWAN,
Manager, GRANTHAMALA OFFICE, Kancheepuram-3.
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un delivered please return to :

P. B. ANNANGARACHARYA,
KANCHEEPURAM. Pin Code 6315[illegible]



To
Sriman / Srimathi

78 Srimathi M. A. Krishnammal,
Advocate, 20, South Mada Street,
Triplicane, Madras-5.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kancheepuram-3,